உ

கணபதி துணை

## சங்கர நயினார் கோயிற்

# சங்கரலிங்க உலா

இது
மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி
டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள்
பரிசோதித்து எழுதிய குறிப்புரை முதலியவற்றுடன்
அவர்கள் குமாரர்
S. கலியாண சுந்தரையரால்

சென்னை, கபீர் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பெற்றது

சுபானு௵ மாசி௴

இரண்டாம் பதிப்பு

 1944 [ விலை அணா 10

# இப்புத்தகத்தில் அடங்கியவை

கணபதி துணை

# முகவுரை

## திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்

திருச்சிற்றம்பலம்

காரேறு நெடுங்குடுமிக் கயிலா யன்காண்
  கறைக்கண்டன் காண்கண்ணார் நெற்றி யான்காண்
போரேறு நெடுங்கொடிமே லுயர்த்தி னான்காண்
  புண்ணியன்கா ணெண்ணரும்பல் குணத்தி னான்காண்
நீரேறு சுடர்ச்சூலப் படையி னான்காண்
  நின்மலன்கா ணிகரேது மில்லா தான்காண்
சீரேறு திருமாலோர் பாகத் தான்காண்
  திருவாரூ ரான்காணென் சிந்தை யானே.

திருச்சிற்றம்பலம்

தெய்வங்களையும் அரசர்களையும் உபகாரிகளையும் ஆசிரியர்களையும் புகழ்ந்து புலவர்கள் பாடும் தமிழ்ப் பிரபந்தங்கள் பலவற்றுள் **உலா** என்பது ஒன்று. இது பாட்டுடைத் தலைவனது பவனியைச் சிறப்பித்துப் பாடுதலின் இப்பெயர் பெற்றது. தலைவன் உலாவருகையில், பேதைமுதற் பேரிளம்பெண் ஈறாக உள்ள ஏழு பருவத்துப் பொதுமகளிர் அவனை நயந்தாரென்னும் பொருளமையக் கலிவெண்பாவால் இயற்றப்பட வேண்டுமென்பது இதற்குரிய இலக்கணம்.

**சங்கரலிங்க உலா** என்பது பாண்டி நாட்டுச் சிவஸ்தலங்களுள் ஒன்றாகிய சங்கரநயினார் கோயிலில் எழுந்தருளியுள்ள சங்கரலிங்கமென்னும் திருநாமமுள்ள சிவபெருமான்மீது இயற்றப்பெற்றது. இது **வரராசை உலா** எனவும் வழங்கும். இதனை இயற்றிய ஆசிரியர் இன்னாரென்று தெரியவில்லை; இதன்கண் **காவை வடமலையப்பப் பிள்ளையன்** செய்த திருப்பணிகளைப் பற்றிய செய்திகள் கூறப்படுதலால், அப்பிள்ளையன் காலத்துக்கு இந்நூலாசிரியர் பிற்பட்டவர் என்பதுமட்டும் பெறப்படுகிறது. இந்நூல் 312 கண்ணிகளை உடையது.

இத்தலத்தில் சிவபெருமான்,

"ஒருபாற் புலித்தோ லுடைதயங்க மற்றை
ஒருபாற்பொன் னுடை யொளிர—ஒருபால்
மழுவு மொருபால் வளையுந் துலங்கத்
தழுவு முருவமைந்து" (கண்ணி, 13—4)

சங்கர நாராயணராக எழுந்தருளி யிருக்கின்றார். அவருக்குரிய அறுபத்து நான்கு மூர்த்தங்களில் சங்கர நாராயண மூர்த்தம் ஒன்று. அம்பிகையின் வேண்டுகோளுக்கிரங்கி அவர் இத்திருவுருவத்தோடு இத்தலத்தில் எழுந்தருளினர் என்பது புராண வரலாறு. இஃது இந்நூலிலுள்ள நான்காய் கண்ணி முதலியவற்றால் விளங்கும்.

"கங்கா யமுனைச் சங்கமம் போலவும்
சங்கர நாரணர் சட்டகம் போலவும்
வெண்பாவு மாசி ரியமுமாய் விராஅய்ப்
பண்பார் புறநிலை.........." (யா. வி. 2, மேற்.)

என்னும் பழைய உதாரணச் செய்யுளில் மருட்பாவுக்கு இம் மூர்த்தம் உவமையாகக் கூறப்பெறுதல் இங்கே அறிதற்குரியது.

இத்தலத்திற்கு இந்நூலையன்றித் தமிழ்ப் புராணம் ஒன்றும், *அந்தாதி ஒன்றும் உள்ளன.

இந்நூலின்கண் இத்தல வரலாறுகள் பல அமைந்திருக்கின்றன. கௌரி பூசித்த செய்தி முற்பகுதி (4 - 16)யில் விரிவாகச் சொல்லப்படுவதோடு, பின்னும், "நேசிக்கு மன்பா னிறைகருணை யாவுடைத்தேன், பூசிக்கும் புன்னைவனப் பூங்கனியே" (143) எனவும் அமைக்கப்பட்டுள்ளது. இவ்வரலாறு இத்தலத்திலுள்ள சித்திரசாலையில் ஓவியமாகக் காட்டப்பெற்றிருந்த தென்பதை, "நீடுபுன்னைக், காவைநே சித்துவந்த கண்ணுதலை யாவுடைய, பாவை பூசித்தபடி பாரீர்" (284) என்பது தெரிவிக்கின்றது.

சங்கன், பதுமன் என்னும் மகாநாகர் இருவருள் ஒருவர் உண்மைப் பொருள் சிவபெருமானென்றும், மற்றொருவர் திருமாலென்றும் வாதித்துக் கொண்டிருந்து பின்னர் வியாழ பகவானது ஏவலால் வந்து இத்தலத்தில் தவஞ்செய்ய, இருவரும் ஒருவரென்பது அவர்களுக்குப் புலப்படச் செய்தற்கு இறைவர் சங்கர நாராயணத் திருவுருவத்தைக் காட்டியருளினர். இவ்வரலாறு முற்பகுதி (17 - 9) யிற் சொல்லப்பட்டிருப்பதன்றி, "சங்க பற்ப, நாகம் பரவவந்த நாதனுர்" (33) எனவும், குழாங்களின் கூற்றில், "பூத்த மதிவெதுப்பும் போதுசங்க பற்பரென, வாய்த்த வரவை வழுத்துமென்பார்" (140) எனவும், சித்திரசாலைக் காட்சியைப் பற்றிய செய்தியில், "இவ்வுலகிற் சங்கபற்ப ரென்னு மரவரசர்க், கவ்வுருவந் தந்த வருள் பாரீர்" (286) எனவும் அமைந்துள்ளது.

உக்கிரபாண்டியர் திருக்கோயிலமைத்தது (22 - 3, 287), ஓரந்தணனது பெண்பிறவியை இறைவர் மாற்றி முத்தியளித்தது (24), அகத்திய முனிவர்க்குப் பஞ்சாட்சர உபதேசம் செய்தது (26, 288), இந்திரகுமாரனாகிய சயந்தனுக்குக் காக்கைவடிவம் நீக்கியது (27), நாகசுனையில் வீழ்ந்திறந்த ஒரு வேடனுக்கு முத்தி அளித்தது (28), ஓரந்தணன் செய்த கோஹத்திப் பாவத்தைத் தீர்த்தது (29) முதலிய வரலாறுகளும் இந்நூலின் இடையிடையே காணப்படுகின்றன.

---

* இவ்வந்தாதி என்னால் மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் குறிப்புரை முதலியவற்றுடன் அச்சிடப்பட்டுள்ளது.

சிராத்தத்திற்காக அந்தண னொருவன் வைத்திருந்த பழத்தை உண்டத னாற் சோழனொருவன் உற்றநோயை இறைவர் புற்றுமண்ணாகிய மருந்தை அளித்து நீக்கினர் (25.) இக்காலத்தும் இத்தலத்திற் புற்றுமண்ணை மருந்தாக உண்டு பிணிதீர்ந்து காணிக்கை அளித்துச் செல்வோர் பலர். இச்செய்தி இந்நூலில், "பூவலயம், வெம்பும் பிணிக்கு மெலியாது காணிக்கைச், செம் பொன் குவிக்குந் திருநாளில்" (37-8), "பொருந்தும் பெரும்பிணிக்கோர் புற்றி னிடத்து, மருந்து தூரவந்தான் வந்தான்" (111), "கூருநோய், ஆற்று மருந்தளிப்பான்" (135-6), "புற்றிடத்து மண்மருந்தா லெப்பிணியும், பேர் மருந்து மென்றுன்" (182) என்று பலபடியாகப் பாராட்டப்படுகின்றது.

இத்தலத்து மூர்த்தியின் திருநாமங்களுள் சங்கரர் (30, 180, 238, 246), வன்மீகநாதனர் (32), சங்கர நாராயணர் (34) என்பன இந்நூலில் வந் துள்ளன. அம்பிகையின் திருநாமம் கோமதியென வடமொழியிலும் ஆவுடைநாயகியெனத் தென்மொழியிலும் வழங்கும். ஆவுடைநாயகி யென் பது 'ஆவுடைத்தேன்' (30, 143), 'ஆவுடைய செங்தேன்' (104), 'ஆவுடைய வஞ்சி' (43), 'ஆவுடைய, பூங்கொம் பனையாள்' (163) என இந்நூலிற் பாராட்டப்பெற்றுளது. இத்தலத்தின் வேறு பெயர்களாகிய ராசை (34), சீராசை (87, 246, 262), வரராசை (184, 204, 296), கூழை (306) என்பவை இதன்கண் ஆளப்படுகின்றன. இராசை யென்பது ஸ்ரீராஜபுரம் என்பதன் மருஉவென்று தெரியவருகின்றது. இத்தலத்து விருட்சம் புன்னையாதலின் இது புன்னைவனம், *நாகவனமெனவும் வழங்கப் பெறும். இத் தலத்திலுள்ள தீர்த்தங்கள் பல. அவற்றுள் இதன்கண் தேவர்கள் திருத்தியமைத்த தேவதீர்த்தமும் (11), சங்கபற்பராற் காணப் பெற்ற நாகசுனையும் (28, 138, 151) † கூறப்படுகின்றன.

இந்நூலாசிரியர் சைவசமயாசாரியர் நால்வரிடத்தும் பேரன்பு பூண்ட வர். **திருஞானசம்பந்தமூர்த்தி நாயனரை**, "பொன்னிசைய மேவும் புகலியர் கோன்" (269), "தென்புகலி வேந்து" (278) என்பர். அவருடைய அருட் செயல்களுள் என்பைப் பெண்ணாக்கியதையும் (79, 154-5), பாண்டியனது கூனைநிமிர்த்ததையும் (278) எடுத்தாளுவார். அவர் அருளிச்செய்த தேவா ரத்தை, "சிந்தைமகிழ், தேம்பா கனையவிசைச் செந்தமிழ்" (78-9), "செஞ் சொன் முதுதமிழ்" (278) எனப் பாராட்டுவார். **திருநாவுக்கரசு நாயனரை**, "வேம்படிக்குக், கூடிப் பறிதலைவன் குண்டரிட்ட நீற்றறையைப், பாடிக் குளிர்வித்த பாவலன்" (79-80), "வன்புலையர், கற்றுணையாச் சேர்த்துக் கடற்படுத்த வஞ்செழுத்தும், நற்றுணையென் றேதினேன்" (278 - 9) என்பர். **சுந்தரமூர்த்திநாயனரை** "ஏடவிழ்ந்து, புள்ளை யழைக்கும் புனலின் முதலைவாய்ப், பிள்ளை யழைக்கும் பெருமான்" (80-81), "முற்றுலகும், அண்டத் தொகையு மருமறையும் போற்றுதிருத், தொண்டத் தொகைவகுத் தோன்" (279-80) என்பர். **தேவாரங்களை**, "தமிழ்மூவர் செஞ்சொ

* நாகம் - புன்னைமரம்.

† இத் தலத்தைப்பற்றிய பிற வரலாறுகளைச் சங்கரநயினர்கோயிலந்தா தியின் முகவுரையிற் காணலாம்.

லமுதம்" (55), "மதுரம், பழுத்ததமிழ் மூவரிசைப் பாட்டு" (74) என்று சிறப்பிப்பார். **மாணிக்கவாசகரை,** "வாதவூராளி" (75), "தெள்ளிய சொற், செம்பாவை நாவாற் றெளித்து வடித்ததிரு; அம்பாவை பாடியபே ரன்பினன்" (81-2), "பண்டுமன்றில், ஆடினேன் பூண்டெழுத வாய்ந்த அறைநானூறு, பாடினேன்" (280-81) என்றுகூறுவர். **திருவாசகத்தை,** "இன்செஞ்சொல்" (75) என்றும், "பைந்தமிழ்" (281) என்றும் பாராட்டுவார். நாயன்மார்களுள், **சேரமான் பெருமாள் நாயனாரை,** "கூடலின் முக்கட் குழகன் வரவிட்ட, பாட லிசைபுனைந்த பார்த்திவன்" (83) என்பர். "மண்ணிடந்த மாலும் **வனசரனும்** மெய்யன்பாற், கண்ணிடந்து சாத்தவருள் கண்ணுதலோன்" (203) என்றவிடத்துக் **கண்ணப்ப நாயனார்** செயலைப் புலப்படுத்தி யிருக்கின்றனர்.

பிறதலச் செய்திகளிற் சில இதன்கண் வந்துள்ளன: "காவேந் தளித்தவந்தக் கண்ணுதலைத் தென்கமலைப், பூவேந்த வைத்த புகழோனும்" (84) என்று **முசுகுந்த சக்கரவர்த்தியைக்** கூறுமுகத்தால் திருவாரூர்த் தலச் செய்தியும், "நெல் வேலிவரை, மாமுத்தை வேண்டி வளர்த்தோனும்" (85) என்று **முழுதுகண்ட ராமபாண்டியனைக்** கூறுமுகத்தால் திருநெல்வேலித் தல வரலாறொன்றும் இதன்கண் எடுத்தாளப்படுகின்றன. மதுரைப் பெருமான் திருவிளையாடல்களுள் திருமுகங் கொடுத்தது, "கூடலின் முக்கட் குழகன் வரவிட்ட, பாடலிசை" (83) என்றவிடத்தும், வளையல் விற்றது, "செங்கை வளை, அன்றணிந்த சீர்" (121-2) என்றவிடத்தும், கல்லானைக்குக் கரும் பருத்தியது, "மதன் விற்கரும்பைக் கல்லானைக், கன்றுபோ லின்றளித்தா லாகாதோ" (309) என்றவிடத்தும் குறிப்பிக்கப்பட்டுள்ளன.

"ஆவுடைத்தேன், பூசிக்கும் புன்னைவனப் பூங்கனியே" (143) என்ற விடத்துப் புன்னைவன மென்றதற்கேற்ப இறைவரைக் கனியாக உருவகம் செய்த இந்நூலாசிரியர் பின் அவரைத் தேனாக உருவகம் செய்து, "முக்கட் பசுந்தேறல், வந்திருக்கும் புன்னைவனம்" (214) என்று நயம்பெறக் கூறுகின்றார். மன்மதனுடைய ஆற்றலைப் புலப்படுத்துவதற் கெண்ணிய இவர், "அஞ்செழுத்தோன், பாதித் திருவுருவம் பச்சை கலந்துருகப், பேதித்தோன்" (118) என்று அவனைச் சொல்லியிருத்தல் பொருட்பொலி வோடு அமைந்துள்ளது.

இறைவருடைய தசாங்கங்கள் இந்நூலில் 261-ஆம் கண்ணி முதலிய வற்றிற் கூறப்பட்டுள்ளன.

இந்நூலிற் சொல்லப்படும் ஏழுபருவ மகளிரும் பொதுமகளிரென்பதை, "மன்னர், இனம்போ லுதவமனத் தெண்ணிப் புதைத்த, தனம்போ லமைந்த தனத்தாள்" (155-6) எனப் பேதையையும், "முரசளிக்கும் வேலைமதன் மூவுலகும் வெல்ல, அரசளிக்க வந்தமட வன்னம்" (190) என மங்கையையும், "எழுவாரி வையத் தெவர்க்கு மதனால், வழுவாம லோது மடந்தை" (208), "பூவலரும்; கொத்துத் தொடையல் குவலயத்தோ ராவியொடு, வைத்துச் செருகு மலர்க்குழலாள்" (211) என மடந்

யையும், "இளைஞ ருயிரனைத்து முண்ணுமல், வெட்டியுடன் மீளும் விழியினுள்" (250), "கனியிருந்த சொல்லியர்க்குக் காமா கமநூல், இனி திருந்து கற்பிக்கு மெல்லை" (260) எனத் தெரிவையையும் கூறுமுகத்தால் உய்த்துணர வைத்திருக்கின்றனர். அப்பருவ மகளிரது இயல்புகளை உரிய இடங்களில் ஏற்றவாறு புனைந்துள்ளார். அவர்களது பருவத்துக்கேற்ற விளையாடல்கள் பலவற்றை இதனுட் காணலாம். "தழைத்த கதிரெறிக்குந் தண்டரள வண்டல், இழைத்துவிளை யாட்டயரு மெல்லை" (161) எனப் பேதைப்பருவத்தில் சிற்றில் விளையாட்டும், பெதும்பைப் பருவத்தில் கழங்காடலும், மங்கைப் பருவத்தில் ஊசலாட்டும், மடந்தைப் பருவத்தில் யாழ் வாசித்தலும், அரிவைப் பருவத்தில் பொழில் விளையாட்டும், தெரிவைப் பருவத்திற் புனல் விளையாட்டும், பேரிளம்பெண் பருவத்தில் அம்மானை யாடலும் சொல்லப்பட்டுள்ளன. ஏழுபருவ மகளிரின் பிராய அளவு நூல்களிற் பலவாறுகக் கூறப்படும். இந்த உலாப் பிரதியின் பின்னர் எழுதியிருந்த * கட்டளைக் கலித்துறை ஒன்றிற் சொல்லப்பட்ட பிராய அளவு வருமாறு: ஏழு வரையிற் பேதை, ஒன்பது வரையிற் பெதும்பை, பன்னிரண்டு வரையில் மங்கை, பதினன்கு வரையில் மடந்தை, பதினெட்டு வரையில் அரிவை, இருபத்தொன்று வரையில் தெரிவை, முப்பத்திரண்டு வரையிற் பேரிளம்பெண்.

மாதர்களால் தலைவனிடத்தே தூதாக விடுக்கப்படுவனவாகப் புலனெறி வழக்கிற் பயிலும் பொருள்களுள், "ஏற்றமயல், விண்டுபசுந் தார்வாங்கி மீண்டுவரப் புன்னைவன, வண்டு களையழைத்து வம்மென்பார்" (136 - 7), "சுரும்பை யழைத்திதழி வாங்கிவரச், சொன்னுள் விடுத்தாள்" (239) என்று **வண்டும்**, "உண்டசுவை, அன்னத்தை நஞ்சென் றயராதே நாகசுனை, அன்னத்தைத் தூதுக் கழையுமென்பார்" (137 - 8) என்று **அன்னமும்** எடுத்தாளப்பட்டுள்ளன.

பிற தமிழ்நூல்களிற் காணப்படுதல்போலவே இதன்கண்ணும் தற் குறிப்பேற்ற அணி அமைந்த பலபகுதிகள் உள்ளன. இவ்வகையில் ஆசிரியர் சூரியன் உதயமானதை, "என் இறைவராகிய சிவபெருமான் மேல் அம்பெய்த மன்மதனை அவருடைய நெற்றிவிழியில் உள்ள எனது இனமாகிய அக்கினி அழித்தது ; அதற்கிணங்க அம்மன்மதன் யானையாகிய இருளை நான் அழிக்கின்றேன் என்றதுபோல உதயமானுன்" (41 - 2) என்று சொல்லுகிருர்.

இறைவர் திருவாபரணங்களைப் புனைந்ததாக உள்ள பகுதியில், 'தன் விடம் சிவபெருமானது ஒருறுப்பாகிய திருக்கழுத்திற் றங்கி அழகு செய் வதை எண்ணிப் பாம்பானது தானும் ஒருறுப்பிற் பொருந்தி அழகுசெய்தது போலத் திருக்கரத்தில் திருக்காப்பணிந்தார்', 'இரண்டு பாம்புகள் தாம் விடத்தோடுள்ள பழியை நீங்குதற்கெண்ணி இறைவர் திருச்செவியில் இருப் பின் தேவாரங்களாகிய இனிய அமுதத்தைக் கவர்ந்து கொள்ளலாமென்று

* இதனை இப்புத்தகத்தில் 38-ஆம் பக்கத்திற் காணலாம்.

குழையாக வந்தது போலத் தோன்றத் திருக்குழை புனைந்தார்' (54 - 6), 'நங்களுடைய தலைவனாகிய சந்திரனை இறைவர் அணிந்த அன்பு கண்டு அம்முறைபற்றி, எம்மையும் அணிந்தருள்கவென்று நட்சத்திரங்கள் ஒழுங்காக வந்தனவென்று சொல்லும் வண்ணம் முத்துமாலையைப் பூண்டார்' (61 - 3), 'சந்திர சூரியர்களாகிய எங்களைக் கண்ணாகக் கொண்டீர்; ஆயினும் சந்திரனை மட்டும் முடியின்மீது அமைத்தீர்; என்னை மறந்தீர்; என்னையும் அவனைப்போலத் திருமுடிமேற் புனைந்தருள வேண்டுமென்று சூரியன் திருவடியைப் பிடித்து வேண்டுவதுபோலத் திருச்சிலம்பை அணிந்தார்' (66 - 8), 'முன்னொருகால் புரங்களை வெல்வதற்காக இறைவர் நம்மை வளைத்து வில்லாகக் கொண்டும் அவற்றை நகைத்தெரித்து விட்டமையால் நாம் பயனின்றி யொழிந்தேம்; இனி வேறொரு வகையிலேனும் உதவுவேமென மேருமலை நினைந்து அவ் வளைந்த உருவத்தோடே பணிசெய்ய வந்ததென்று சொல்லும்படியுள்ள திருவாசிகையைச் சேர்த்தினர்' (69 - 71) எனவரும் பகுதிகள் முதலியனவும், 'உமக்குள்ள இருதேவியாருள் கங்கையைமட்டும் சடையில் ஏந்தினீர்; என்னுடைய மகளாகிய உமையையும் அவ்வாறு செய்தருள்கவென்று வேண்டி ஏத்துதற்கு இமயமலை போந்தது போன்றது தேர்' (91 - 2), "'நாம் ஓரன்னமாகப் போயினமையாற் காணமுடியாத திருமுடியை இரண்டன்னமாக எழுந்துசென்றுற் காணலாம்' என்று பிரமன் நினைந்து அவ்வாறே வந்து முயல்வதுபோல இரண்டு சாமரைகள் இரட்டப்பெற்றன" (93 - 5), 'தலைவரைப் பிரிந்தவிடத்துச் சுடும் சந்திரனைக் கடியும்வண்ணம், மாதர்கள் இறைவர் சடைமேல் சந்திரனோடு இருந்த பாம்பிற்கு உணவாகக் காற்றை அளித்து விருந்தளிப்பது போல ஆலவட்டம் பணிமாறினர்' (95 - 7) என்பனவும் பிறவும் இவ்வகையைச் சார்ந்தனவே.

தெளிவு என்னும்பொருளில் தெள் (3) என்பதை இவர் அமைப்பர். தயவு (62), பருந்த (180, 243), படியெடுப்பு (188), அருந்துப்படி (308), செடாடவி (39) என ஒருமொழி தொடர்மொழிப் பிரயோகங்கள் சில இதில் வந்துள்ளன.

பலவகைச் சொற்பொருள் நயங்களும் அணியமைதிகளும் அமைய, 'ஓரேழ் பருவத் தொளிவளையார்—நேர்போதக், கண்ணுதலான் புன்னை நறுங் காவுடையா னோர்பாகத், தொண்ணுதலான் போந்த' உலாவைச் சிறப்பித்துப் பாடப்பெற்ற இந்நூல் எழுதியிருந்த சுவடி ஒன்று ஏறக்குறைய 40 வருடங்களுக்கு முன்பு திருநெல்வேலிப் பக்கத்துள்ள ஓரூரில் இருந்து வந்த ஸ்ரீ முத்துக்குமாரசாமி பிள்ளை என்பவர் மூலமாக எனக்குக் கிடைத்தது. வேறுபிரதி இதுகாறும் கிடைக்கவில்லை. ஆதலின் உள்ள பிரதியை வைத்துக்கொண்டு எழுதுவோரால் நேர்ந்த பிழையென்று தெரிந்தவற்றை நீக்கி ஆராய்ந்து இப்பொழுது, 'புன்னைப் பொதும்பரின்கீழ்ப் புற்றா டினிதமர்ந்த, முன்னைப் பொருளாம் முழுமுதல்வன்' திருவருளைத் துணைக்கொண்டு இந்நூல் வெளியிடப்பெற்றது.

இத்தலத்தின் சம்பந்தமாக யானறிந்த இரண்டு வரலாறுகள் உண்டு; அவை வருமாறு:

1. * ஆறை அழகப்ப முதலியார் என்பவர் திருநெல்வேலியில் இருந்து ஆட்சிபுரிந்து வருகையில், சங்கரநயினார் கோயிலிலுள்ள நாயகரைச் செண்பகக்கண் பட்டரென்பவர் களவுசெய்து கொண்டு போய்த் திருவுத்தரகோச மங்கையில் அடகுவைத்துப் பொருள் வாங்கிக்கொண்டு சென்றுவிட்டனர். அம்மூர்த்தி அத்தலத்தில் இருப்பதனை அறிந்து, அக்காலத்து இராமநாதபுரத்தில் அரசாண்ட விஜய ரகுநாதசேதுபதிமன்னர் அம்மூர்த்தியை அத்தலத்துக்கோயிலில் எழுந்தருளுவித்துப் பூசை முதலியன நடத்திவரும்படி கட்டளையிட்டனர். சங்கரநயினார் கோயிலில் மூர்த்தி களவுபோன செய்தி ஆறை அழகப்ப முதலியாருக்கு அறிவிக்கப்பட்டது. அவர் அதனை அறிந்து அம்மூர்த்தியை மீண்டும் இத்தலத்திற்குக் கொணரும் வரையிற் பாற்கஞ்சியையன்றி வேறுஉண்பதில்லையென்ற நியமத்தோடிருந்தார். பின் உத்தரகோசமங்கையில் அம்மூர்த்தி இருப்பதையறிந்து அவரை எங்ஙனம் கொணர்வதென்று ஆலோசித்து வந்தார். வருகையில் வடகரை ஸமஸ்தானத்தில் அப்பொழுது ஸ்தானாதிபதியாக இருந்தவரும், மிக்க புத்திவன்மையும் செந்தமிழ்ப்புலமையும் உடையவருமாகிய பொன்னம்பலம்பிள்ளையென்பவர் அச்செயலை முடிக்கும் ஆற்றலையுடையவரென்று பலராலறிந்து அவரை வரவழைத்து, விக்கிரகத்தைக் கொணரவேண்டுமென்று இராமநாதபுரத்திற்கு அனுப்பினர். அவர் அங்கேசென்றும் சிலநாள்வரையிற் சேதுபதி மன்னரைக் காணமுடியவில்லை; காவடியெடுத்து வருபவர்களைத் தடையின்றிப் பார்க்கும் வழக்கம் அம்மன்னர்க்கு உண்டென்பதை யறிந்து, தாமும் ஒரு காவடியை எடுத்துக்கொண்டு, உடன்வந்தவரை வாத்தியகாரர் முதலியவர்களாக வேடம் புனைவித்து அரண்மனைவாயிலில் நிற்கையில் சேதுபதி மன்னர் வந்தனர். அவரைக்கண்டவுடனே பொன்னம்பலம்பிள்ளை விநயத்துடன் அவரைப்புகழ்ந்து சில செய்யுட்களைச்சொல்லி மகிழ்வித்துத் தம்மை இன்னாரென்று புலப்படுத்தி அவரால் உபசரிக்கப்பெற்று அங்கே சிலநாள் இருந்தனர். பின்னர், உத்தரகோசமங்கைக்குச்சென்று ஸ்வாமி தரிசனம் செய்துவரவேண்டுமென்று அம் மன்னரிடம் விடைபெற்றுச்சென்று அங்கே சங்கரநயினார் கோயில் நாயகர் இருப்பதையும், அவர் அங்கேவந்த வரலாற்றையும் அறிந்து, தாம் அவரை வினவியதாக, † 'புற்றெங்கே' என்னும் வெண்பாவையும், அவர் விடைகூறியதாக, ‡ 'விள்ளுவமோ' என்னும் வெண்பாவையும் பாடிவைத்துக்கொண்டு மீண்டும் இராமநாதபுரம் சென்று சேதுபதிவேந்தர்முன் அவ்விரண்டு வெண்பாக்களையும் கூறினர். அவற்

* இவ் வரலாறு சொக்கம்பட்டிப் பாளையப்பட்டுச் சரித்திரம் — இரண்டாம் பாகத்திற் காணப்பட்டதாகும்.

† இதனை 38-ஆம் பக்கத்திற் காண்க.

‡ இதனை 38-ஆம் பக்கத்திற் காண்க.

றைக்கேட்ட மன்னர் பொன்னம்பலம்பிள்ளையினுடைய குறிப்பை அறிந்து உத்தரகோசமங்கையிலிருந்த விக்கிரகத்தைச் சங்கரநயினர் கோயிலுக்கு எழுந்தருளச்செய்வித்தனர். அவரிடம் விடைபெற்றுப் பொன்னம்பலம் பிள்ளை ஸ்வாமியுடன் புறப்பட்டார். அவர் சென்ற காரியத்தை நிறை வேற்றிக்கொண்டு வருவதையறிந்த ஆறை அழகப்பமுதலியார் திருமங்கலத் திற்கே வந்து நாயகரைத் தரிசித்து சங்கரநயினர் கோயிலுக்கு எழுந்தருளு வித்தார்.

2. தஞ்சைமாநகரில் மேலைவீதியில் சங்கரநாராயணர் கோயிலொன்று உளது. ஒருகாலத்தில் அந்நகரில் அரசாண்டிருந்த மகாராஷ்டிரமன்னர் களுள் ஒருவருடைய பெருந்தேவியார் இந்தச் சங்கரநயினர் கோயிலின் மகிமையையும், இத்தலமூர்த்தியைத் தரிசித்தோர் பிணிநீக்கம், மகப்பேறு முதலியன அடைதலையும் அறிந்து தாமும் இவரைத் தரிசிக்கவேண்டுமென் றெண்ணினர். அதனையறிந்த மன்னர் தக்க சிற்பிகளை இத்தலத்துக்கு அனுப்பி இங்குள்ள மூர்த்தியின் அமைப்பு முதலியவற்றை அறிந்துவரச் செய்து அங்ஙனமே ஒருகோயில் தஞ்சையில் எடுக்கச்செய்து, அதில் மூர்த்தி யைப் பிரதிஷ்டை செய்வித்து, இங்கே நடப்பதுபோலவே நித்தியநைமித் திகங்கள் நடப்பித்துவந்தனர்.

இந்த உலாவைத் தமது 'சிவநேசன்' பத்திரிகையில் வெளியிட்டுப் பல சிவநேசர்களும் தமிழன்பர்களும் படித்து இன்புறச் செய்வித்த பத்திராதிபர் ஸ்ரீமான் ராம. கு. ராம. இராமசாமி செட்டியாரவர்களது அன்புடைமை ஒரு பொழுதும் மறக்கற்பாலதன்று.

இதனைப் பதிப்பிக்குங் காலத்து உடனிருந்து உதவியவர்கள் சென்னை, கிறிஸ்டியன் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் சிரஞ்சீவி வித்வான் வி. மு. சுப்பிர மணிய ஐயரும், மோகனூர்த் தமிழ்ப்பண்டிதர் சிரஞ்சீவி கி. வா. ஜகந்நாதை யரும் ஆவர்.

'தியாகராஜவிலாசம்'
திருவேட்டீசுவரன்பேட்டை,
சென்னை.
1—5—1933.

இங்ஙனம்,
**வே. சாமிநாதையர்**

குறிப்பு.—மேலேயுள்ள என் தந்தையாரவர்களுடைய முகவுரையால் இந்நூலைப்பற்றிய வரலாறுகள் நன்கு விளங்குமாதலால் நான் வேறு எழுது வது மிகையாகும்.

**S. கலியாணசுந்தரையர்,**
20—2—44.

உ

கணபதி துணை

சங்கர நயினர் கோயிற்

# சங்கரலிங்க உலா

## தலவிசேடம் முதலியன

கலிவெண்பா

1. **பா**ர்தந்த பூங்கமலப் பண்ணவனும் வென்றிதரு
போர்தந்த நேமிப் புரவலனும்—ஏர்தந்த
2. நந்தா வளம்பெறுபொன் னாடு புரந்தளிக்கும்
தந்தா வளப்பூந் தருவரசும்—முந்தார்வத்
3. தெள்ளிருக்கு முண்மைநிலை தேர்ந்திருக்கு மேன்மேலும்
உள்ளிருக்கு மன்பா லுகந்திறைஞ்ச—வெள்ளித்
4. தவளப் பொருப்புத் தனிலிருந்த முக்கட்
பவளப் பொருப்பைப் பரவிக்—கவுரியன்பு
5. நாட்டிய சங்கர நாரா யணர்வடிவம்
காட்டி யருளுகெனக் கண்ணுதலும்—மோட்டுலகில்

---

## குறிப்புரை

1. நேமி - சக்கரம். புரவலன் - திருமால்.

2. தந்தாவளம் - யானை ; ஐராவதம். அரசு - இந்திரன். முந்து ஆர்வம்.

3. தெண்மை இருக்கும் - தெளிவு பொருந்திய ; மைவிகுதி பெற்ற பண்புப் பெயரில் பகுதிப் பொருள் விகுதியாகிய மையை நீக்கி முதனிலையோடு மொழிகளைச் சேர்த்துக் கூறுவதும் மரபு ; "தண்ணார் திருமஞ் சனமாடி" (45) என்பர் பின்னும் ; "வருந்துநாய் நாவிற் பெருந்தகு சிறடி" (பொருந. 42) ; "கருவார் பொழில்", "கருவார் சோலை" (தே. பிரமபுரம், திருவாரூர்.) இருக்கும் - வேதமும். இருக்குமென்னும் பெயரெச்சங்கள் அன்பென்னும் பெயரைக்கொண்டு முடிந்தன.

1 - 3. பண்ணவனும், புரவலனும், அரசும், இருக்கும் இறைஞ்ச.

3 - 4. இறைஞ்ச இருந்த. கவுரி - உமாதேவியார். கைலையங்கிரியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைப் பரவி.

5. சங்கரரும் நாராயணரும் கலந்த திருவுருவம் : 6-7, 13-6, 19, 34, 109, 142, 285-6-ஆங் கண்ணிகளைப் பார்க்க ; "சீரேறு திருமாலோர்

6. மன்னிய புன்னை வனத்துளவோர் புன்னைநிழல்
தன்னி லிருந்து தவமியற்றின்—அன்ன

7. இருவடிவுங் காட்டுதுநா மென்றிசைப்பப் பச்சை
ஒருவடிவம் பெற்ற வுமைமான்—மருவிரிபூங்

8. காவாகிப் பூவுங் கனியு மளிப்பதற்கும்
கோவாகித் திம்பால் கொடுப்பதற்கும்—ஆவுடைய

9. கோதையெனத் தன்னுமங் கூறுதற்கும் வானோரும்
மாத ரரம்பையரும் வம்மினென—மேதினியில்

10. தெய்வ மகளிரொடுந் தேவர் குழாத்தோடும்
அவ்வனத் தேகி யமர்ந்தருளிச்—செவ்விபெற

11. மன்றல் கமழ்குவளை வான்சுனையை வானோர்கள்
அன்று திருத்தி யருகமைப்ப—ஒன்றிய

12. சிந்தனை கூர்ந்துதவஞ் செய்து நெடுங்காலம்
வந்தனை செய்து வருநாளில்—எந்தை

---

பாகத்தான்காண்", "திருமாலோர் பங்கத்தான்காண்" (தே. திருவாரூர், திருப்புத்தூர்); "தாழ்சடையு நீண்முடியு மொண்மழுவுஞ் சக்கரமும், சூழர வும் பொன்னுணுந் தோன்றுமால் - சூழும், திரண்டருவி பாயுந் திருமலைமே லெந்தைக், கிரண்டுருவு மொன்ரு யிசைந்து" (திவ். மூன்றுந்திருவந்தாதி, 63.) என - என்று உமாதேவியார் விண்ணப்பம் செய்ய.

4 - 5. கவுரி பரவி அருளுக என.

6. புன்னைவனம் - இத்தலத்தின் பெயர்; புன்னை, தலவிருட்சம்: 18, 29, 31, 137, 143, 149, 162, 204, 214, 236, 283-4, 312.

7. காட்டுதும் - காட்டுவேம். கண்ணுதல் (5) காட்டுதுமென்று இசைப்ப (7) பச்சை வடிவம் பெற்ற உமை: 118, 163, 183.

8 - 9. ஆவுடைய கோதை: பசுக்களையுடைமையால் அம்பிகை ஆவுடைய நாயகியென்று திருநாமம் பெற்றனள்; இது வடமொழியிற் கோமதியென வழங்கும்; 30, 43, 104, 143, 163, 284, 303.

7 - 9. உமைமான், பூவும் கனியும் கொடுப்பதற்குக் காவாகும்படி தேவரையும், அபிஷேகத்திற்குப் பால் கொடுப்பதற்கும் ஆவுடை நாயகி யென்று தம்மைக் கூறுதற்கும் பசுக்களாகும்படி அரம்பையரையும் வம்மி னென்று கட்டளையிட்டு.

10. அவ்வனத்து - மேற்கூறிய புன்னை வனத்திற்கு. அமர்ந்து - விரும்பி எழுந்தருளியிருந்து.

11. அங்கே உள்ள ஒரு சுனையைத் தேவர்கள் திருத்தி யமைக்க. ஒன்றிய - ஒன்றுபட்ட.

12. வந்தனை செய்து - வழிபட்டு; அம்பிகை வழிபட்டது: "நீடுபுன் னைக், காவைநே சித்துவந்த கண்ணுதலை யாவுடைய, பாவைபூ சித்தபடி பாரீர்" (283-4) என்பர் பின். அமர்ந்தருளி (10), கூர்ந்து தவஞ் செய்து வந்தனை செய்து வருநாளில்.

13. ஒருபாற் புலித்தோ லுடைதயங்க மற்றை
ஒருபாற்பொன் னுடை யொளிர—ஒருபால்

14. மழுவு மொருபால் வளையுந் துலங்கத்
தழுவு முருவமைந்து தானே—ஒழுகுமொளி

15. கான்ற விருவடிவுங் காணத்தா னோர்வடிவிற்
றோன்றியருள் செய்யத் தொழுதாங்கண்—ஆன்ற

16. பழைய வுருவின் படியுறைய வென்ன
அழகுதர நாளு மமர்ந்தோன்—முழுதும்

17. நிலைமைபெறு மெய்ப்பொரு ளேமியான் செங்கைக்
கொலைமழுவா னென்றுதம்மிற் கூறும்—மலைவொழியத்

18. தாமேவிச் சங்கபற்ப ரென்னுந் தடநாகம்
தேமேவு புன்னைவனஞ் சென்றுதொழப்—பூமேல்

19. இருவுருவு மொன்ரு யிறைவிக் களித்த
திருவுருவங் காட்டியருள் செய்ய—இருநிலத்தோர்

20. தங்களுக்கு வேண்டுவன தந்தளிக்கு நல்வரமும்
அங்கவர்க்கு முத்தி யருள்வரமும்—எங்களுக்கு

21. மெய்ப்பொருளு மெம்மை விரும்பிப் பணிபவருக்
கெப்பொருளு மீக வெனவளித்தோன்—ஒப்பிலாப்

22. பண்டா ரணந்தேர் பராசத்தி சாபத்தாற்
சண்டாள னைவிண்ணோன் ருனுணர்த்தக்—கண்டாய்ந்து

---

13. பொன்னுடை - பீதாம்பரம்; இது திருமாலுக்குரியது; "பொன் புனை யுடுக்கையோன்" (பரி. 15 : 8); "பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய, செங்க ணெடியோன்" (சிலப். 11 : 50-51.)

15. இருவடிவு - சங்கரநாராயணர் வடிவம்.

16. என்ன - என்று ஆவுடை நாயகி விண்ணப்பம் செய்ய.

18. சங்கபற்பர்-சங்கன், பத்மனென்னும் மகாநாகர் இருவர்; 20-21, 33, 140, 286; பற்பர் - பத்மர்; எதுகை: "பற்பநாபன்" **திருவாய்மொழி**, 2. 7 : 11.

17 - 9. உண்மைப் பொருள், சிவபெருமானென்றும் திருமாலென்றும் தம்முள் மாறுபட்டு வாதித்துக்கொண்டிருந்த சங்கன், பதுமனென்னும் மகாநாகர் இருவரும் வியாழ பகவானது ஏவலால் இங்கே வந்து தவம் செய்ய இருவரும் ஒருவரென்பது அவர்களுக்குப் புலப்படும்படி செய்தற்குச் சிவபெருமான் முன்பு ஆவுடை நாயகிக்குக் காட்டிய சங்கரநாராயணத் திருவுருவைக் காட்டியருளினரென்பது இத்தலபுராண வரலாறு.

21. என - என்று சங்கபற்பர் வரம் கேட்ப.

22. பராசத்தி - அம்பிகையின். விண்ணோன் - **மணிக்கிரீப**னென்னும் தேவன்; "மலைமகள் சாபந் தன்னாற் புலையனு மணிக்கி ரீபன்", "பொருப்பிளங் கன்னி சாபம் பொருந்தலாற் புலைய னாகி, மருத்துணர் விரிந்த புன்னை வனத்துறை மணிக்கி ரீபன்" **சங்கர. புராணம்**, உக்கிரன் வழிபடு சருக்கம், 23, 36.

23. செம்பொற் றடவரையிற் சேல்பொறித்த வேந்தமைத்த
அம்பொற் சினகரத்து ளன்றமர்ந்தோன்—வெம்பவங்கள்
24. ஆற்றி யறுதொழிலோ னன்றெடுத்த பெண்சனனம்
மாற்றியுயர் முத்தி வழங்கினேன்—போற்றும்
25. மறையோன் பொருளதனை வவ்வியபூம் பொன்னிக்
கிறையோன் பிணிதீர்த்த வெங்கோன்—குறையாத
26. வண்மைப் பொதியவரை மாமுனிக்கோ ரஞ்செழுத்தின்
உண்மைப் பொருளை யுணர்த்தினேன்—தண்ணாங்

23. வேந்து - உக்கிரபாண்டியன். கொற்கையை இராசதானியாகக் கொண்டு அரசாண்ட உக்கிரப் பெருவழுதி யென்னும் அரசன் நாள் தோறும் திருவாலவாய் சென்று ஸ்ரீ சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்துவரும் நியம முடையவன். ஒரு நாள் தரிசனஞ் செய்தற்கு இத்தலத்தின் வழியே செல்லுகையில் அவன் ஏறி வந்த யானை கீழே விழுந்தது. அப்பொழுது அரசன் ஒன்றும் தெரியாமல் திகைத்து நிற்கையில் மேற்கூறிய மணிக்கிரீப னென்பவன் வந்து பணிந்து, “ அரசே, அடியேன் இவ்வனத்தைத் திருத்திக் கொண்டிருப்பவன். ஒரு புற்றை வெட்டுகையில் அவ்வெட்டினால் வாலற்றுப்போன பாம்பொன்று மேலே தோன்றியது. அதனைப் பரமசிவனுடைய திருவுருவமென்றே எண்ணுகிறேன்” என்று சொன்னான். அரசன் அங்கே சென்று பார்த்துக்கொண்டு நின்று, “மதுரைக்குச்செல்ல முடியவில்லையே” என்று வருந்தியபொழுது, “ அரசே, நீ மதுரை சென்று அலையவேண்டாம்; அங்கயற்கண்ணியோடும் ஆலவா யமர்ந்த அண்ணல் இங்கு எழுந்தருளி யிருக்கின்றார். இவ்விடத்திலேயே தரிசனம் பண்ணிக்கொள்ளலாம்” என்று ஓர் அசரீரி உண்டாயிற்று. உடனே அவன் புன்னை மரத்தின் நிழலிற் புற்றினருகே ஒரு சிவலிங்கம் இருக்கக் கண்டு தரிசனம் செய்துகொண்டு திருக்கோயில் முதலியவற்றை அமைத்து அங்கே வாழ்ந்து வந்தனனென்பது இத் தலபுராண வரலாறு; இதனை உக்கிரன் வழிபடு சருக்கத்தால் அறிய லாகும். கண்ணி, 110, 287 பார்க்க.

24. பிராமணன் ஒருவன் தன் மனைவியைப் புறக்கணித்த தீமையால் மறுபிறப்பில் **தக்கணை** யென்னும் பெண்ணாகப் பிறந்து **காலப** முனிவ ரேவலால் இத்தலத்தை அடைந்து தவம் செய்து பின்பு அந்தப் பிறவி நீங்கப் பெற்று முத்தியும் பெற்றான். இந்த வரலாறு இத்தல புராணத்திலுள்ள தக்கணை தவம்புரிந்த சருக்கத்தால் அறியப்படும்.

25. பொன்னிக்கிறையோன் - சோழன். உறையூரில் அரசாட்சி செய்துகொண்டிருந்த **வீரசேன**னென்னும் சோழன் ஓரந்தணன் வீட்டிற் சிராத்தத்திற்கு வைத்திருந்த பழத்தை அதனை அறிந்தும் பசி மிகுதியால் வாங்கியுண்டான். அந்தப் பாவத்தால் ஒருவகைப் பிணியுற்று இத் தலத் திற்கு வந்து சிவசன்மரென்னும் அந்தணரொருவர்பாற் பஞ்சாட்சர உப தேசம் பெற்றுச் சிவபெருமானை வழிபட்டுப் பிணியினின்றும் நீங்கப் பெற்றான். இவ் வரலாறு வீரசேனன் பிணிதீர்ந்த சருக்கத்தால் அறிய லாகும்; “ பழுதிற், பொருந்து பெரும்பிணிக்கோர் புற்றி னிடத்து, மருந்து தரவந்தான் வந்தான்”, “கூருநோய், ஆற்று மருந்தளிப்பான்”, “புற்றிடத்து மண்மருந்தா லெப்பணியும், போமருந்து மென்றான்” (111, 136,182) என்பர் பின்னும்.

26. அகத்தியருக்குப் பஞ்சாட்சரத்தின் பொருளை உபதேசம் செய்த னர்; “ ஆர வரைமுனிக்கோ ரஞ்செழுத்தி னுண்மையிலே, தேர உரைத்த திறம்பாரீர்” (288.)

27. கடிகமழ் கற்பகப்பைங் காவேந்தன் மைந்தன்
கொடியுருவ மாற்றுங் குழகன்—படிமிசையில்

28. ஞான நெறியுதவு நாகசுனைப் பாலிறந்த
கானவனை யாளுங் கருணையான்—ஈனமுற

29. ஆவி னுயிர்செகுத்த வந்தணன்றன் புன்னைநறுங்
காவில் வழுத்தக் கதிகொடுத்தோன்—மேவரிய

30. சங்கரர் சங்கரி தற்பரை யாவுடைத்தேன்
பங்கரர் வேதபி பழம்பொருளார்—செங்கமலப்

31. பாதனார் காதிற் பகவிருவர் சங்கீத
நாதனார் புன்னைவன நாதனார்—மூதரவில்

32. ஆடரியும் வேதாவு மன்றரியு மன்னமுமாய்
நாடரிய வன்மீக நாதனார்—நீடியபொன்

33. மாகம் பரவ மறைபரவச் சங்கபற்ப
நாகம் பரவவந்த நாதனார்—ஏகரெனும்

---

27. காவேந்தன் - இந்திரன். மைந்தன் - சயந்தன். கொடியுருவம் - காக்கையுருவம். சயந்தன் காக்கையுருவெடுத்துச் சீதையைக் கொத்திய தனால் இராமராற் கோபிக்கப்பெற்று மீண்டும் வந்து அவரடியில் வீழ்ந்து அருள் பெற்றான். பெற்றும் பழைய காக்கை வடிவம் நீங்காமையால் மிகுந்த நாணத்தையடைந்து இந்திரன் ஏவலால் இத்தலத்தை யடைந்து வழி பட்டு அவ்வடிவம் நீங்கினான்; இத் தல புராணத்துள்ள சயந்தன் வினை தீர்த்த சருக்கத்தால் இவ்வரலாறு அறியப்படும்.

28. நாகசுனை : மேற்கூறிய சங்கன், பத்மனென்னும் மகாநாக ரிருவ ரால் உண்டாக்கப்பட்ட சுனை; 138, 151.

பசியினாற் சோர்வையடைந்த வேடனொருவன் நாகசுனையில் நீர் குடிக்க வந்து தவறி அதில் விழுந்து இறந்தான். அவன் ஒருநாள் இந்தத் தலத்தில் வசித்தமையாலும், நாகசுனை நீர் தீண்டப் பெற்றமையினாலும் முத்தியை யடைந்தான்; இவ்வரலாறு கானவன் வீடுபெற்ற சருக்கத்தால் அறிய லாகும்.

29. **கன்மாட**னென்னும் அந்தணனொருவன் சமித்து, தருப்பை முதலி யன கொண்டு வருகையில் தன்னை எதிர்த்து வருத்தவந்த பசுவைத் தள்ள அது சேற்றில் விழுந்து அதிற் புதைந்து இறந்தது. அந்தத் தீவினையாற் பற்றப்பட்ட அவன் இத்தலத்தை அடைந்து நாக சுனையில் நீராடிச் சங்கர லிங்கத்தை வழிபட்டு அப்பழியினின்றும் நீங்கிச் சிவசாரூபத்தை அடைந்தா னென்பது கன்மாடச் சருக்கத்திலுள்ள கதை.

30. சங்கரர் : "சீராசைச் சங்கரனே" (246) என்பர்பின். ஆவுடைத் தேன் - ஆவுடை நாயகியை; "ஆவுடைய செந்தேன்" (140. )பங்கு அரர்.

31. இருவர் - கம்பளர் அசுவதாருடைய. சங்கீத நாதனார் - இசை யொலியைக் கேட்பவர்; நாதம் - ஒலி. மூதரவு - முதுமை அரவு.

32. ஆடு அரி - ஆடிய திருமால். அரியும் அன்னமும்-பன்றியும் அன் னப்பறவையும். வன்மீக நாதனார் - புற்றிடங் கொண்டார்; "புன்னைப் பொதும்பரின்கீழ்ப் புற்று டினிதமர்ந்த, முன்னைப் பொருளான்" (162) என்பர் பின்.

32 - 3. பொன்மாகம் - தேவலோகம்.

34. நம்பரர் சங்கர நாரா யணராசை
அம்பரர் போற்றுமறை யாதியர்—கொம்பனைய

## சித்திரைத் திருவிழா

35. முல்லை மகளிர் முலைக்கோடு பாய்ந்துழக்கும்
குல்லை யிடபக் கொடியேற்றி—வல்லை

36. ஒருமுகங் கொண்டுவம்மென் றும்பர்வர விட்ட
திருமுகமே யெங்கெங்குஞ் செல்ல—யிருவிவந்து

37. மூவ ரிசைமுழங்க முப்பத்து முக்கோடி
தேவர் வணங்குந் திருநாளில்—பூவலயம்

38. வெம்பும் பிணிக்கு மெலியாது காணிக்கைச்
செம்பொன் குவிக்குந் திருநாளில்—தும்பையொடு

39. சித்திரைக் கங்கை யணியுஞ் செடாடவியான்
சித்திரைத் திங்கட் டிருநாளில்—நத்திச்

40. சிவந்தபதத் தாமரையைச் சேவித் துலகம்
உவந்ததிரு நாளி லொருநாள்—நிவந்திகலும்

41. எப்பகையு மில்லாத வென்னிறைமேல் வாளிதொட்ட
அப்பகையைத் தன்கிளையொன் றட்டதெனத்—துப்பின்

---

34. சங்கர நாராயணர்: "சங்கர நாரணனே" (கூழையந்தாதி, 56.) ஆசை அம்பரர் - திக்காகிய ஆடையை யுடையவர்; திகம்பரர்.

35. முல்லைமகளிர் - கோவியர்; முல்லை - முல்லைநிலம். குல்லை - திருத்துழாய். இடபக்கொடி, திருமாலாதலின் குல்லையிடபக் கொடியென்றார்; "அன்றெடுத்த கன்மாரிக் காக வருவிநெடும், குன்றெடுத்தவென்றிக்கொடி", "அங்கமலத் தாளை யளிக்குந் திருவுந்தித், துங்கவிடை யானை", "ஆவி யனையபதி ஞாறு யிரங்கொம்பு, மேவி வளரும் விடைக்கொடியும்", "சோர விடைப் பாகன்" 98, 121, 264, 288-9.

37. மூவர் இசை - திருஞான சம்பந்தமூர்த்திநாயனர் முதலிய மூவரது தேவாரம்; "தமிழ் மூவர் செஞ்சொல்", "மதுரம், பழுத்ததமிழ் மூவரிசை, பாட்டும்" (55, 74); 79-81, 278-9-ஆங் கண்ணிகளைப் பார்க்க.

38. தங்கள் தங்களுடைய பலவகையான பிணிகளைத் தீர்த்துக்கொள்வதற்கு வந்து பலவகையான காணிக்கைகளைத் திருமுன் செலுத்திவிட்டு அன்பர்கள் செல்வது இத்தலத்தில் நிகழும் தொன்றுதொட்ட வழக்கம்.

39. சித்திரை - சித்திரம், ஆச்சரியம். சித் திரை கங்கை யெனப் பிரித்து அறிவு மயமாகிய கங்கை யெனலுமாம்; திரை - அலை. சித்திரைத் திங்கள் - சித்திரை மாதம்; சித்திரை மாதத்தில் இத்தலத்தில் விழா நடக்கும்; "தெண்ணிலா வேணி யார்க்குச் சித்திரைத் திங்க டன்னில், விண்ணவரி றைஞ்சி யேத்த விழாவினை நடத்தி னானே" (உக்கிரன் வழிபடு சருக்கம், 33.)

40. நிவந்து - தலையெடுத்து.

41. என் இறை மேல் - என் தலைவராகிய சங்கரர்மேல். வாளி - அம்பை. அப்பகையை - அந்த மன்மதனை. தன் கிளையென்றது நெற்றிக் கண்ணிலுள்ள நெருப்பை. துப்பின் - வன்மையையுடைய.

42. வெறிதரு மப்பகையின் வேழமெறிந் தென்னச்
செறிகதிரோன் வந்துதயஞ் செய்ய—நறியகுழல்

## திருப்பள்ளியெழுச்சி முதலியன

43. வாய்ந்தமயி லாவுடைய வஞ்சியிளங் கொம்புடனே
தோய்ந்தமணப் பள்ளித் துயிலெழுந்து—சேர்ந்தததி

44. செய்யநறை நெய்யொடுபாற் றீங்கடலுண் கார்பவளத்
துய்யவரை பெய்வதெனச் சூழ்ந்தாட்ட—மையுலவு

45. விண்ணா றிழிந்து விரிசடைமேல் வீழ்ந்ததெனத்
தண்ணார் திருமஞ் சனமாடி—நண்ணும்

46. இறைவியொடு மாகமத்தி னெல்லை கடவாக்
குறைவில் பெரும்பூசை கொண்டு—முறையின்

## திருவாபரணம் புனைந்தருளுதல்

47. தனதுவிட மோருறுப்பைச் சார்ந்துபற்றிக் கொண்ட
தெனவதனை யுள்ளத்தி லெண்ணிப்—பனகமும்

48. ஒப்பற்ற மற்ற வுறுப்பொன் றினைத்தானும்
கைப்பற் றியதென்னக் காப்பணிந்து—மெய்ப்படுத்தி

---

42. வெறி - மயக்கத்தை. அப் பகையின் வேழம்-மன்மதனது யானையாகிய இருளை. செறிகதிரோன் - சூரியன்.

41 - 2. நெற்றிக் கண்ணாகிய நெருப்பு மன்மதனை எரித்தமையின், அதன் இனமாகிய சூரியன் அவன் யானையாகிய இருளை அழித்தற்கு வந்தாற்போலத் தோன்றினா னென்பது கருத்து ; முச்சுடருள் அக்கினியும் ஒன்றுதல் பற்றிக் கிளை யென்றார்.

43. இளங்கொம்பு - இளங்கிளை. மலர்கள் பரப்பிய பள்ளியாதலின் மணப்பள்ளி யென்றார். ததி - தயிர்.

44. நறை - தேன். தயிர் முதலிய நாற்கடல்களை யுண்ட மேகம் பவழ மலையின்மீது அவற்றைச் சொரிந்தாற்போல. அவற்றால் அன்பர்கள் திரு மஞ்சனம் ஆட்ட. மை - மேகம்.

45. விண்ணாறு - ஆகாய கங்கை ; எழுவாய்.

46. இறைவியொடும் - ஆவுடை நாயகியோடும். முறையின் - முறைமையினால்.

47 - 8. ஓருறுப்பை - கண்டத்தை. அதனை - அங்ஙனம் பற்றிக்கொண்டதனை. பனகமும் - பாம்பும். காப்பு - கையணி.

திருக்கரத்தில் அணியப்பட்ட காப்பு, தன்னிடத்திலுண்டாகிய விடம் இறைவனுடைய திருக்கழுத்தைச் சார்ந்துள்ளது, அதுபோல ஒப்பற்ற மற்றோர் உறுப்பைத் தான் கைப்பற்ற வேண்டுமென்று எண்ணி ஒரு பாம்பு சூழ்ந்துகொண்டது போன்றது என்றபடி.

49\. முன்ன மெனாது திசை வேய்ந்தனை முற்றுமினிப்
பொன்னுலக மென்னையும் பூணுகநீ—என்னத்

50\. திருவரையைச் சுற்றிவலஞ் செய்நதெனச் செங்கேழ்
மருவியபொன் னுடை வனைந்து—திரிபதகை

51\. வானுதற்குந் தோளிணைக்குந் தோற்ற மதியரவம்
பூணுதற்கும் வேணி பொருந்துதற்கும்—நாணி

52\. இறங்க விறைகண் டிடையணைத்த தென்னத்
திறங்கவினக் கச்சுடைவாள் சேர்த்தி—திறங்கிளரும்

53\. கஞ்சமல ரோன்செருக்காற் காணு முடியுலகத்
தஞ்சலித்த வன்பர்க் கருள்வலென—விஞ்சிப்

54\. படருமொளி கான்றரத்னப் பத்தி யிழைத்துச்
சுடரு மணிமகுடஞ் சூட்டி—விடமார்

55\. தமதுபழி நீக்கத் தமிழ்மூவர் செஞ்சொல்
அமுத முடன்பழகி யந்த—அமுதை

56\. விரவக் கவரவந்து மேற்கொண்ட தென்ன
அரவக் குழைகா தணிந்து—பரவையெழு

57\. மைவிடத்தை நீல மணியென்று செம்மணிகள்
அவ்விடத்தைத் தாமு மடுத்தவெனக்—கவ்வை

58\. ஒலிதருநீர் வேலி யுலகம் புகழப்
பொலிதருபொற் கண்டசரம் பூட்டி—இலகும்

---

49 - 50. வேய்ந்தனை - ஆடையாக உடுத்தினை; திசையாடை ; 34. பொன்னுலகம் : எழுவாய். திரிபதகை - கங்கையினுடைய.

எனக்குரிய திசையை ஆடையாக உடுத்த தேவரீர், என்னையும் அணிந்துகொள்ள வேண்டுமென்று பொன்னுலகம் வந்து இடையைச் சூழ்ந்தாற்போலப் பொன்னுடையை அணிந்து.

51\. மதியும் அரவமும்.

52\. இறங்க - மதியும் அரவமும் இறங்க. இறை - சங்கரர். இடை அணைத்ததென்ன - இடையிற் சேர்த்துக்கொண்டாற்போல. கச்சுக்குப் பாம்பும், உடைவாளுக்கு மதியும் உவமை.

53\. கஞ்சமலரோன் காணு முடி - பிரமதேவன் காணாத திருமுடியை.

54\. விடம் ஆர் - விஷம் நிரம்பிய.

55\. தமிழ் மூவர் - சைவ சமயாசாரியர் மூவர்.

56\. கவர - கவர்தற்கு. அரவக்குழை - பாம்பாகிய குண்டலத்தை.

55 - 6. அரவக்குழைகள், விடத்தோடு கூடிய தமது பழியை நீக்கிக் கொள்ளுதற்குத் தேவாரமாகிய அமுதத்தோடு பழகும்பொருட்டு வந்து தங்கினாற்போன்றன.

57 - 8. கவ்வை ஒலிதரு நீர்வேலி; கவ்வை ஒலி - பெருமுழக்கம். "கௌவை நீர்வேலி" (பு. வெ. 83.) கண்டசரம் - செம்மணியாலாகிய கண்டசரம். அது கண்டத்திலுள்ள விஷத்தை நீலமணியென்று எண்ணிச் செம்மணிகளும் வந்து தங்கினாற்போன்றது.

59. ஒருசுடரோன் செம்பவளத் தோங்குமிரு வெற்பில்
இருசுடராய் வந்துதித்தா லென்னப்—பொருவில்
60. உயர்கனக ரத்னத் தொளிவிட் டெறிக்கும்
புயவலயந் தோண்மேற் புனைந்து—துயல்வந்து
61. மின்ன மணியகல மீது நிலவுதரித்
தன்ன புரிநூ லமைத்தருளிச்—சென்னிமிசைத்
62. தம்மிறையை வைத்த தயவினுற் றூரகையும்
அம்முறைமை நோக்கி யணிகென்று—செம்மை
63. திருந்தும் படியொழுங்காய்ச் சேர்ந்தவெனச் செவ்வி
பொருந்துந் தரளவடம் பூண்டு—வருந்தமுடி
64. தாங்குதிசை யெட்டினையுந் தத்தம் பொறைநீக்கி
ஓங்குதுகி லாக வுடுத்தவென—வாங்கிப்
65. பணிக்குலங்கள் நல்கியவப் பங்கயக்கைக் கென்ன
மணிக்கடகஞ் செங்கை வயக்கி—இணக்கும்
66. மருவரைக்கச் சீன்ற மணியொளிசூழ்ந் தென்னத்
திருவுதர பந்தனமுஞ் சேர்த்தி—இருவரையும்
67. கண்ணுகக் கொண்டாய் கலைமதிபோ லென்னையும்வே
றெண்ணது வேணி யிருத்துகென—எண்ணும்

---

59. ஒரு சுடரோன் - சூரியன். 60. துயல்வந்து - அசைந்து.

59 - 60. வாகுவலயத்திற்குச் சூரியன் உவமை.

61. அகலம் - மார்பு. புரிநூல் - பூணூல். பூணூலுக்கு நிலவு உவமை; "பெருகொளிய செஞ்சடைமேற் பிள்ளைப் பிறையின், ஒரு கதிரே போந் தொழுகிற் றெக்கும் - தெரியின், முதற்கண்ணுன் முப்புரங்க ளன்றெரித்தான் மூவா, நுதற்கண்ணுன் றன்மார்பி னூல்" (அற்புதத்திருவந்தாதி, 32.)

62. தம்மிறை யென்றது பிறையை. தாரகை - நட்சத்திரங்கள். அணிக - அணிந்தருள்வீராக 63. சேர்ந்த : முற்று. செவ்வி - அழகு.

62 - 3. முத்துக்கு நட்சத்திரம் உவமை : "வரித்த தண்கதிர் முத்த தாகி யிம் மண்ணை னைத்துநி ழற்றமேல், விரித்த பந்தர் பிரித்த தாமென மீனொளித்தன வானமே" (கம்ப. கைகேசி சூழ்வினை. 50); "உடுவாம் வெண்முத்த மொழுக்கி" (தக்க. 182.)

64. தத்தம் பொறை - தங்கள் தங்களுக்குரிய பாரத்தை. உடுத்த - உடுத்தின.

65. பணிக்குலங்கள் - பாம்புகள். மணிக்கடகம் - மாணிக்கக் கடகங்களை.

64 - 5. கடகத்திலுள்ள மாணிக்கங்கள், தமது பாரமாகிய திசைகளை ஆடையாக வாங்கி உடுத்திய கைகளுக்கு அட்டநாகங்கள் செலுத்திய காணிக்கைபோல இருந்தன.

66. உதரபந்தனம் - வயிற்றிற் கட்டிக்கொள்ளும் ஒருவகை அணி. இருவரையும் - சந்திரனும் சூரியனுமாகிய எங்கள் இருவரையும்.

67. இருத்துக என.

68. கருத்தாற் கதிரிரவி கால்பிடித்த தென்னத்
திருத்தாட் சிலம்பு திருத்தி—அரக்கன்

69. புயங்கொண்ட வெள்ளிப் பொருப்பொளியாய்த் தென்னத்
தயங்குங் கருப்பூரஞ் சாத்திப்—பயங்கொளமுன்

70. கோட்டிய மேருவடகுன்றம் புரத்தைநகை
விட்டியதென் றேநானும் வேறுபயன்—காட்ட

71. ஒருவா சிகையுருவா யோங்கிய தென்னத்
திருவா சிகையிலங்கச் சேர்த்தி—மருவும்

72. தனதுகலை யென்ஞான்றுந் தாங்கியவா றுட்கொண்
டனையதொரு கைம்மா றளிப்பப்—புனிதன்

73. நிரந்தவுருத் தாங்கமதி நின்றதென வட்டம்
பரந்தநிலைக் கண்ணாடி பார்த்துத்—தெரிந்து

74. வழுத்து மொருநான் மறையு மதுரம்
பழுத்ததமிழ் மூவரிசைப் பாட்டும்—முழுத்தவன்பின்

---

68. கதிர் இரவி - கிரணத்தையுடைய சூரியன்.

66 - 8. கண்ணைக்கொண்ட எங்க ளிருவரிற் சந்திரனை மட்டும் முடிமேல் அணிந்தீர்; என்னையும் அப்படியே அணிந்துகொள்ள வேண்டுமென்று திருவடியைப் பிடித்துக்கொண்ட சூரியனைப்போல விளங்கியது மாணிக்கச் சிலம்பு. அரக்கன் - இராவணன்.

69. கருப்பூரம் - பச்சைக் கருப்பூரம்; அதற்குக் கைலையின் ஒளி உவமை. பச்சைக் கருப்பூர மணிதல்: " காந்தி, திவளப் பொலிவதெனச் செந்திருமெய் யெங்கும், தவளக் கருப்பூரஞ் சாத்தி " (திருவாரூருலா, 66-7); " கற்பூரச், சுண்ணம் பனிநீரிற் றோயும் பசுங்களபம், விண்ணும் புவியும் விடா யாற்ற " (சொக்க. உலா. 59.)

70. மேருவட குன்றம் - மேருமலை; எழுவாய். புரத்தை - முப்புரத்தை. நகை - புன் முறுவல்.

71. வாசிகை - ஒருவகை மாலை; திருவாசிகை.

70 - 71. நம்மை வில்லாக வளைத்தும் இறைவன் நம்மைப் பயன்படச் செய்யவில்லை; அவரது நகை முப்புரங்களைச் சுட்டது; நாம் வேறு பயனைக் காட்டவேண்டுமென் றெண்ணி, மேருமலை ஒருவகை மாலையாக வந்து அவரைச் சார்ந்தது போன்றுள்ளது திருவாசிகை.

72. கலை - பிறையை. உட்கொண்டு - சந்திரன் எண்ணி. புனிதன் - சிவபெருமான்.

73. நிரந்த - நிரம்பிய.

72 - 3. சந்திரன் நம்முடைய கலையை எப்பொழுதும் இறைவன் தாங்கியிருத்தற்கு ஏதேனும் பிரதியுபகாரம் செய்யவேண்டுமென் றெண்ணி அவருடைய திருவுருவ முழுவதையும் தாங்குதற்கு வந்து நின்றாற் போன்றது நிலைக்கண்ணாடி.

74. மூவர் இசைப்பாட்டு - தேவாரம்.

75. அஞ்சலிசெய் வாதவூ ராளிதிரு வாசகத்தின்
செஞ்சொன் முழுதுஞ் செவிசாத்தி—நஞ்சமுண்ட

## உடன்வருவோர்கள்

76. எந்தை யருளுக வென்று கனிக்குவலம்
வந்தவொரு கோட்டு மதகளிறும்—முந்துசமர்

77. பற்றியடு வெஞ்சூர்ப் பகைவே ரறத்தடிந்து
வெற்றிதரு செங்கைவடி வேலோனும்—முற்றுமன்பால்

78. வந்தனை செய்யும் வழிபாட் டினைத்தடுத்த
தந்தைதிருத் தாளெறிந்த தண்டியும்—சிந்தைமகிழ்

79. தேம்பா கனையவிசைச் செந்தமிழா லங்கத்தைப்
பூம்பாவை யாக்கிய பூசுரனும்—வேம்படிக்குக்

80. கூடிப் பறிதலைவன் குண்டரிட்ட நீற்றறையைப்
பாடிக் குளிர்வித்த பாவலனும்—ஏடவிழ்ந்து

81. புள்ளை யழைக்கும் புனலின் முதலைவாய்ப்
பிள்ளை யழைக்கும் பெருமானும்—தெள்ளியசொற்

82. செம்பாவை நாவாற் றெளித்து வடித்ததிரு
அம்பாவை பாடியபே ரன்பினனும்—பைம்புனல்சூழ்

83. கூடலின் முக்கட் குழகன்வர விட்டவொரு
பாட லிசைபுனைந்த பார்த்திவனும்—பீடுகெழு

---

75-6. வாதவூராளி - **திருவாதவூரடிகள்**. எந்தை : அண்மை விளி. கனிக்கு - மாங்கனிக்கு. மதகளிறு - விநாயகமூர்த்தி.

77. சூர்ப்பகை - சூரனாகிய பகையை. அவன் மாமரமாகி நின்றமையின் வேரறத் தடிந்தென்றார் ; பரி. 5 : 4, பரிமேல்.

78. தண்டி - **தண்டீச நாயனார்**.

79. தேம்பாகு - வெல்லப்பாகினை. அங்கத்தை - என்பினை. பூசுரன் - **திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்** ; 154-5ஆம் கண்ணி பார்க்க. வேம்படிக்கு - வேகும்வண்ணம்.

80. பறிதலை வன் குண்டர் - சமணர். நீற்றறை - சுண்ணாம்பறை. பாவலன் - **திருநாவுக்கரசு நாயனார்**. ஏடு அவிழ்ந்து - பூமடல்கள் விரியப் பெற்று.

81. புள்ளை - வண்டுகளை. பெருமான் - **சுந்தரமூர்த்தி நாயனார்**.

82. செம் பாவை - செவ்விய பாட்டுக்களை. திரு அம்பாவை - திருவெம்பாவையை ; திருவெம்பாவை திருவம்பாவையென்வும் வழங்கும். பாவைப் பாட்டென்று ஒருவகை இசைப்பாட்டு, பழைய நூல்களில் வழங்கும் ; அதனை நினைந்து இங்ஙனம் கூறினார்போலும். அன்பினன் - **திருவாதவூரடிகள்**.

83. கூடல் - மதுரை. முக்கட் குழகன் - **சோமசுந்தரக் கடவுள்**. பாடல் - "மதிமலி புரிசை" என்னும் திருமுகப்பாசுரம். பார்த்திவன் - **சேரமான் பெருமாணாயனார்**.

84. காவேந் தளித்தவந்தக் கண்ணுதலைத் தென்கமலைப்
பூவேந்த வைத்த புகழோனும்—நாவேந்து
85. பாமுத் தமிழ்மூவர் பாடியநெல் வேலிவரை
மாமுந்தை வேண்டி வளர்த்தோனும்—தாமுற்றும்
86. ஆற்றுந் தவநெறியா லைம்புலனும் வென்றுகதி
ஏற்ற முனிவ ரெழுவோரும்—நீற்றொளியால்
87. ஆழ்ந்ததிருப் பாற்கடல்சீ ராசைதனக் கொத்ததெனச்
சூழ்ந்ததிருத்தொண்டத்தொகைப்பெருக்கும்-போந்திடவே
88. ஆர்த்தாக்கு மண்டத் தடுக்கையெல்லாம் பந்தாடிப்
போர்த்தாடும் பூதப் பெரும்படையும்—கூர்த்தறிவால்
89. வானவ ரொக்க மகமியற்று வேதியரும்
தான சமயத் தலைவர்களும்—ஏனோரும்
90. எங்கு நெருங்கி யெழுநந்தி கைப்பிரம்பால்
அங்கங் கணியா யமைத்தருளக்—கங்கையொடும்
91. என்மானை யுஞ்சடைமீ தேந்துமென வேத்துதற்குப்
பொன்மா விமயவரை போந்ததென—முன்னம்

---

84. கா வேந்து - இந்திரன். கண்ணுதலை - ஸ்ரீதியாகேசரை. கமலை - திருவாரூர். புகழோன் - முசுகுந்த சக்கரவர்த்தி. கமலைப் பூ - திருவாரூராகிய தாமரைப்பூ: திருவாரூர் பூமிதேவியின் இதயகமலமாதலின் இங்ஙனம் கூறினர்; "மேதினிக், காதன் மங்கை யிதய கமலமா, மாதொர் பாகனாரூர் மலர்ந்ததால்" பெரிய. திருமலைச். 34.

85. நெல்வேலி வரை மாமுந்தை - திருநெல்வேலியில் மூங்கிலிற் றோன்றிய சிவபெருமானை. வேண்டி வளர்த்தோன் - முழுதுகண்ட ராம பாண்டியன். இவ் வரலாறு, திருநெல்வேலித் தலபுராணம், வேண்ட வளர்ந்த மகாலிங்க சருக்கத்தாலும், வேணுவன புராணம், வேண்ட வளர்ந்த சருக்கத்தாலும் விளங்கும்.

87. சீராசை - சங்கர நயினர் கோயில்; "சீராசைச் சங்கரனே", "நந்துதவழ் சீராசை நன்னகரும்" (246,262) என்பர் பின். இது இராசபுரமென்பதன் மரூஉ.

86-7. தொண்டர் கூட்டத்திற்குப் பாற்கடல் உவமை; "அரந்தைதீர்க்கு மடியவர் மேனிமேல், நிரந்த நீற்றொளி யால்......பரந்த வாயிரம் பாற்கடல்போல்வது" (பெரிய. திருக்கூட்டச் சிறப்பு, 3); "மிக்க திருநீற்று மெய்த்தொண்டர் வெள்ளவொளி, புக்கதிருப் பாற்கடலே போல் விளங்க" (சொக்க. உலா. 80); "புரமெ ரிந்து விழுந கைத்த புனித னன்பரெண்ணிலார், வரமி குந்த மேனி நீறு மறுகி லங்கு மொளிகள்பாற்,பரவை முன்பிரிந்த மெய்ப்ப தஞ்சலிக்க ணேயமே, விரவி வந்து காண வெங்குமேவி நேட லொக்குமே" (சிதம்பர. துன்மதச். 48.)

88. ஆக்கும் - உண்டாக்குகின்ற. ஆர்த்துப் பந்தாடி. கூர்த்த அறிவால் - மிக்க அறிவால்; கூர்த்து அறிவாலெனப் பிரித்து அறிவால் மிக்கெனப் பொருள் கொள்ளலுமாம்.

89. மகம் - யாகம்.

90. நந்தி: எழுவாய். அங்கங்கு - அவ்வவ்விடத்தில்.

91. என்மானையும் - என்னுடைய குமாரியாகிய உமாதேவியையும்.

## திருத்தேரில் எழுந்தருளல்

92. பொலங்கிரியைச் சூழ்ந்த பொருப்பேழு நாண
இலங்குமணிப் பொற்றடந்தே ரேறி—அலங்கல்
93. முடியினிறை திங்கள் முடித்தனதோ வென்ன
நெடிய கவிகை நிழற்றக்—கடிமலரோன்
94. ஓரோ திமமா யுணர்தற் கரியதென
ஈரோ திமமா யெழுந்தோங்கித்—தார்முடிக்கீழ்
95. மெய்விரையப் போவதுவும் மீள்வதுவும் போன்றவென
மைவிழியார் வெண்சா மரையிரட்டப்—பெய்தழலால்
96. காயு மதியைக் கடிவதற்குக் காண்சடைமேல்
வேயுரக முண்ண விருந்தளிப்ப—தேயுமெனப்
97. பூங்காவி யங்கட் புளகமுலை மாதரிரு
பாங்கால வட்டம் பணிமாறத்—தீங்கொழிய
98. அன்றெடுத்த கன்மாரிக் காக வருவிநெடுங்
குன்றெடுத்த வென்றிக் கொடி யோங்க—நன்றிதரு
99. பால ரிருவர் பகரா குவுமயிலும்
சீல ரிருவர் சிறைப்புள்ளும்—வேலையெழும்
100. பன்னிருவர் தேரும் பதினொருவர் வெள்ளேறும்
பொன்னுலகப் புத்தேள்வெண் போதகமும்—முன்னிருவர்

---

90-92. இமயமலை தேருக்கு உவமை. கங்கையைப்போல என் மகளை யும் திருமுடிமேற் கொள்ள வேண்டுமென்று இமயமலை வந்ததுபோன்றுள் ளது தேர்.

93. வெண்கொற்றக் குடைக்கு முழுத் திங்கள் உவமை; "திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதும், கொங்கலர் தார்ச்சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ், வங்க ணுலகளித்த லான்" (சிலப். 1 : 1-3.) என்ன - என்று எண்ண.

94-5. ஓர் ஓதிமமாய் - ஒற்றை அன்னப்பறவையாய். அரியதென - அரியது திருமுடியென்று. 'யாம் ஓர் அன்னப்பறவை வடிவங்கொண்டு தேடச் சென்றமையால் முடி காணப்படவில்லை' என்று நினைந்து பிரம தேவன் இரண்டு அன்னப்பறவைகள் வடிவங்கொண்டு வந்தாற்போல இருந் தன வெண்சாமரைகள்.

96-7. காயும் மதியை - தலைவனைப் பிரிந்தவிடத்துச் சுடும் சந்திரனை. ஆலவட்டம் - ஒரு விருது.

98. அன்று - கண்ணனாக அவதரித்த அக்காலத்தில். குன்று-கோவர்த் தனகிரியை. திருமாலாகிய இடபக் கொடி ஓங்க.

99. பாலர் இருவர் - விநாயகரும், முருகவேளும். ஆகு - பெருச்சாளி. சீலர் இருவர் - திருமாலும், பிரமனும். சிறைப் புள் - கருடனும் அன்னப் பறவையும். வேலை - கடலில்.

100. பன்னிருவர் - பன்னிரண்டு சூரியர். பதினொருவர் - ஏகாதச ருத்திரர். ஏறு - இடபம். புத்தேள் - இந்திரன். வெண்போதகம் - வெள்ளை யானை. இருவர் - அசுவினிதேவர்களாகிய மருத்துவர் இருவர்.

101. எண்மர் முதலோ ரிவர்மா னமுமநங்கன்
தண்மலயத் தென்றற் றடந்தேரும்—திண்மையுரம்

102. பெற்றதிசை வேந்தர் பிறங்க வவரவருக்
குற்றதிறல் வாகனமு மூர்ந்துவரப்—பொற்றொடி

103. மாத ரெழுவரும்பூ மாத ரிருவரும்வெண்
போதின் மடவரலும் போர்மகளும்—ஆதரவால்

104. ஏவுடைய மைக்க ணெறிபூங் குழையுடைய
ஆவுடைய செந்தே னருகுவர—ஓவிலிசைக்

105. கின்னரர் கிம்புருடர் கேடி னவசித்தர்
பன்னக வேந்தர் பணிகருடர்—முன்னடப்ப

## இசைக் கருவிகள்

106. எண்ணத் தகுமா யிரங்கரத்தா லோர்வாணன்
வண்ணக் குடமுழவம் வாசிப்பத்—தண்ணுமை

---

101-2. எண்மர் -எட்டுவசுக்கள். இவர்தல் - விரும்புதல். மானம் - விமானம். அநங்கன் - மன்மதன். மலயம் - பொதியில் மலை. பிறங்க - விளங்க.

103. மாதவர் எழுவர் - அபிராமி முதலிய எழுவர். பூமாதர் இருவர்- பூமியாகிய மாது, தாமரைப்பூவில் எழுந்தருளியுள்ள திருமகள் என்னும் இருவரும். வெண்போதில் மடவரல் - கலைமகள். போர்மகள் - வீரலட்சுமி.

104. ஏ - அம்பு. மைக்கண்ணால் எறியப்படுகின்ற. ஆவுடைய செந்தேன் - ஆவுடைய நாயகி; "நிறைகருணை யாவுடைத் தேன்" (143.)

103-4. எழுவரும், இருவரும், மடவரலும், போர்மகளும், ஆவுடைய நாயகியின் அருகே வர.

105. நவசித்தர் - சத்தியநாதர் முதலிய ஒன்பதின்மர். பன்னக வேந்தர் - நாகவரசர். பணிகருடர் - பணிகின்ற கருடர்.

106. வாணன் - முப்புரத் தலைவர்களுள் ஒருவன்; "மூவெயில் செற்ற ஞான்றுய்ந்த மூவரி லிருவர் நின்றிருக் கோயிலின் வாய்தல், காவலாளரென் றேவிய பின்னை யொருவனீகரி காடரங்காக, மானை நோக்கியோர் மாநட மகிழ மணிமுழாமுழக் கவ்வருள் செய்த, தேவ தேவநின் றிருவடி யடைந்தேன் செழும்பொழிற்றிருப் புன்கூரு ளானே" (தே. சுந்தர.); "மூன்றுபுரத் தொன்றி லரசுடை வாணன், மேருக் கிளைத்த தோளா யிரத் தொடும், எழுகடல் கிளர்ந்த திரள்கவி யடங்க, முகம்வே றிசைக்குங் குடமுழா விரட்ட", "அருச்சனை விடாதங் கொருப்படு மூவரில், இருவரைக் காவல் மருவுத வீந்து, மற்றொரு வற்கு வைத்தநட மறிந்து, குடமுழ விசைப்பப் பெறுமரு ணல்கி" (கல். 25 : 31-4 ; 29 : 29-32); வாணாசுரனுமாம்; "போக்கு மாயவன் புணர்ப்பையும் மிருண்மலப் புணர்ப்பையுங் கடந்தெம்மைக், காக்கு நாயக னருச்சனை விடாதருட் கதியடைந் துளவாணன், தாக்கு நேர்பட வாயிரங் கரங்களாற் றொம்மென முகந்தோறும், தாக்க வேறுவே றெழுகுட முழாவொலி தடங்கட லொலிசாய்ப்ப" (திருவிளை. திருமணப். 105.)

107. மிக்க முருடு விசித்ததுடி பேரிகை
தக்கை தடாரி தகுதாளம்—கொக்கரி

108. தொண்டக மாதியாச் சொல்லிய பல்லியங்கள்
அண்ட முகடதிர வார்ப்பெடுப்பக்—கொண்ட

### திருச்சின்னம்

109. அருவுருவ மாகிநின்ற னன்றிருவ ராகி
மருவுருவங் காட்டவந்தான் வந்தான்—உருகித்

110. தொழுதிசைப்ப மாமதுரைத் தொன்னகர்செல் லாது
வழுதி வணங்கவந்தான் வந்தான்—பழுதிற்

111. பொருந்தும் பெரும்பிணிக்கோர் புற்றி னிடத்து
மருந்து தரவந்தான் வந்தான்—திருந்துபுகழ்

112. மையிலகு கந்தரன் வந்தான்வந் தானென்று
செய்ய திருச்சின்னஞ் சேவிப்பத்—துய்ய

113. பணியரவப் பூணன் பவனிதான் செம்பொன்
மணிநெடு வீதி வரலும்—அணிபசும்பொன்

### குழாங்கள்

114. ஆர்ந்த தருநாட் டரிவையரு நீளுரகர்
சேர்ந்ததிரு நாட்டுத் தெரிவையரும்—கூர்ந்திசையேழ்

115. செங்கை மகரயாழ் சேர்த்திசைக்கும் விஞ்சையர்தம்
மங்கையருங் கந்திருவ மாதரும்—அங்கணியாய்

---

107. முருடு - ஒரு வாத்தியம். துடி - உடுக்கை. கொக்கரி - ஒரு வாத்தியம்; இது கொக்கரை யெனவும் வழங்கும்.

109. அரு உருவம் ஆகிநின்றன் - சதாசிவமூர்த்தியாகிநின்றருளியவர். இருவராகி - சங்கரரும் நாராயணருமாகி. காட்ட - உமாதேவியாருக்கும் சங்கபதுமருக்கும் காட்ட.

110. வழுதி - உக்கிர பாண்டியன்.

111. புற்றினிடத்து மருந்து தர - வீரசேனனென்னும் ஒரு சோழவரசனுடைய பிணிநீங்குதற்குப் புற்றுமண்ணாகிய மருந்தைத் தர.

112-3. கந்தரம் - கழுத்து. துய்ய - தூய; தூய்மை யென்னும் பண்புப்பெயர் முதல்குறுகியும் வரும். பணி அரவம் - படத்தை யுடையதாகிய பாம்பு.

114. தரு நாடு - சுவர்க்கலோகம். உரகர்சேர்ந்த திரு நாடு - நாகலோகம்; அதுவும் இன்பத்திற்குரியஇடம்: "நாகநீ ணகரொடு நாகநாடதனொடு, போகநீள் புகழ்மன்னும் புகார்நகர்" (சிலப். 1 : 21-2.) கூர்ந்து - மிக்கு.

115. மகரயாழ் - மகரவீணை. விஞ்சையர் - வித்தியாதரர். அணியாய் - வரிசையாய்.

114-5. இசை யேழ் இசைக்கும்.

116. நின்று பரவ நெடுநீர்த் துணை தரங்கம்
நுன்று பரவைநிலத் தோகையர்கள்—மின்றிகழும்
117. மஞ்சுலவு மேரு வரைமா னதவாவிச்
செஞ்சுடிகை யன்னத் திரளென்ன—அஞ்செழுத்தோன்
118. பாதித் திருவுருவம் பச்சை கலந்துருகப்
பேதித்தோன் சேனைப் பெருக்கென்னப்—போதுற்ற
119. தேனென்ன மாலிமயத் தேவி விழியையின
மானென்று வந்தசில மானென்னத்—தானமுற்றும்
120. காப்பத் திரண்ட களத்திருளைக் காரென்ன
வாய்ப்பத் திரண்ட மயிலென்ன—ஆர்ப்பளிசூழ்
121. அங்கமலத் தானை யளிக்குந் திருவுந்தித்
துங்க விடையானைச் சூழ்தந்து—செங்கைவளை
122. அன்றணிந்த நீரே யணியாது நீக்குவதென்
என்றியம்பா நின்ற வெனவிரங்கக்—குன்றவிற்போற்
123. பொன்பொலியச் செய்தாலப் பொன்வரைபோ லக்குழையிர்
என்பனபோற் கொங்கை யிணைபணைப்ப—அன்பருக்கே
124. ஏற்குமிமை யாமை யெமக்குமளித் தீரெனல்போல்
வேற்குநிக ரான விழிநோக்கப்—பாற்கரன்சூழ்
125. நீலமணி மேடையினு நீணிலா முற்றத்தும்
கோல மரகதச்செய் குன்றத்தும்—சாலவொளிர்
126. ஆணிக் கனகத் தணியா டரங்கத்தும்
மாணிக்கத் தூணிறுத்து மாடத்தும்—சேணுற்ற

---

116-7. பரவை - கடல். மேருவரை மானத வாவி - மேரு மலையிலுள்ள மானதப் பொய்கை. சுடிகை - உச்சிக்கொண்டை. அன்னத்திரள் - அன்னப்பறவையின் கூட்டம்.

118-9. பேதித்தோன் - மன்மதனுடைய. சேனைப்பெருக்கு - சேனையாகிய மகளிர் கூட்டம். போதுற்ற தேன் - திருமகள். இமயத்தேவி - ஆவுடைய நாயகியின். தானமுற்றும் - உலக முழுவதையும்.

120. இருளை - விடத்தை. ஆர்ப்பு அளி - ஆரவாரித்தலை யுடைய வண்டுகள்.

121. கமலத்தானை - பிரமதேவனை. திருவுந்தித் துங்க விடையானை - உந்தியையுடைய திருமாலாகிய இடபத்தையுடையவனை ; உந்தி-கொப்பூழ்.

122. அன்று - மதுரையில் நீர் வளையல் விற்ற அக்காலத்தில். குன்றவில்போல் - வில்லாகிய மேருமலையைப்போல.

121-2. வளை இரங்க.

123. பொன் வரைபோல் - மேருமலையைக் குழைத்ததுபோல. பணைப்ப - பருப்ப. அன்பருக்கு - தேவர்களுக்கு.

124. பாற்கரன் - சூரியன்.

125. செய்குன்றம் - கட்டுமலை.

126. ஆடரங்கம் - நாடகசாலை.

127. தென்ற லுலவு சிறுசா ளரத்துமம்பொற்
குன்ற மனையநெடுங் கோபுரத்தும்—நின்றுதனி
128. ஆதிப் பொருளை யடிவணங்கி வெண்ணிலவார்
பாதிப் பிறையும் படர்சடையும்—சோதித்
129. திருமுகமு மெண்டோளுஞ் செம்பவள மெய்யும்
மருமலர்ப்பூங் கொன்றையணி மார்பும்—இருளெறித்துக்
130. காட்டுந் திருநீல கண்டமுங் கண்ணுதலும்
சூட்டுங் கனகச் சுடர்முடியும்—கோட்டு
131. நிலவு பரப்புதிரு நீற்றொளியுங் காதிற்
குலவு மரவக் குழையும்—உலவுமிரு

## குழாங்களின் கூற்று

132. கண்ணுங் கருத்துங் களிகூர் தரநோக்காப்
பண்ணுங் கனியும் பணிமொழியீர்—கண்ணுதலான்
133. வந்துவார் பூண்முலைக்கு மைவிழிக்கும் பொன்னுமுத்தும்
தந்தவா றின்று தருமென்பார்—ஐந்தலரான்
134. தண்டவார் வில்லிற் றளராத நாணொலி
கொண்டவா றென்கொல் குறித்தென்பார்-ஒண்டொடியாள்
135. சேருமிடப் பாகமன்றிச் சென்றுவலப் பாகநின்று
பாருமென நோக்கும் படிசெய்வார்—கூருநோய்
136. ஆற்று மருந்தளிப்பா னுதலாற் காமநோய்
மாற்று மருந்தளிப்பான் வந்தென்பார்—ஏற்றமயல்

---

127. சாளரம் - பல்கணி.

128. பாதிப்பிறையும் படர்சடையும்: "ஆதிநீ யருளென் றமரர்கள் பணிய வலைகடல் கடையவன் றெழுந்த, பாதிவெண் பிறைசடை வைத்த வெம் பரமர் பாம்புர நன்னக ராரே", "பாதி வெண்பிறைப் பாகு ரடிகளே" (தே.); "மதிப், பாதிவிடங் காகடைக்கண் பார்" (திருவாரூர் நான்மணி. 1.)

131. அரவக் குழை - பாம்பாகிய குண்டலம்.

133. வார்பூண் - கச்சை அணிந்த. பொன் - பசலை நிறம்; முத்து - கண்ணீர்த்துளி; "கதிர்முலைகண், மானக் கனகந் தருமலர்க் கண்கண்முத் தம்வளர்க்கும்" (திருச்சிற். 335.) இன்று தந்தவாறு தரும் என்பார். ஐந்து அலரான் - ஐந்து மலர்ப் பாணங்களையுடைய மன்மதன்.

134. தண்டவார் வில் - கருப்பந்தண்டாகிய நீண்ட வில். ஒண்டொடி யாள் - ஆவுடைய நாயகி.

135. கூரும் நோய் - மிக்க நோயை.

135. இடப்பக்கத்தே சென்று தரிசித்தால் அம்பிகை அறிந்து சினத்தல் கூடுமென்பது கருத்து.

136. மருந்து - புற்று மண்ணாகிய மருந்தை. மாற்று மருந்து: மருந்து - பரிகாரம்; "மருந்தில் கூற்றம்" (புறநா. 3 : 12); "மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீ" (கலி. 60 ; 18.) மயல் - காமமயக்கத்தை.

137. விண்டுபசுந் தார்வாங்கி மீண்டுவரப் புன்னைவன
வண்டு களையழைத்து வம்மென்பார்—உண்டசுவை
138. அன்னத்தை நஞ்சென் றயராது நாகசுனை
அன்னத்தைத் தூதுக் கழையுமென்பார்—முன்னிட்ட
139. வெற்றி தருஞ்சிலைக்கை வேடன் பகைமுடிக்க
நெற்றிவிழி யைத்தொழுது நில்லுமென்பார்—கற்றைநிலாப்
140. பூத்த மதிவெதுப்பும் போதுசங்க பற்பரென
வாய்த்த வரவை வழுத்துமென்பார்—சத்தியெதிர்
141. எங்கட் கரசே யிமையோர் பெருமானே
திங்கட் கொழுந்தணிந்த செந்தேனே—பங்கொருபாற்
142. செக்கச் சிவந்த செழுஞ்சுடரே மாலையொரு
பக்கத் திருத்தும் பழம்பொருளே—நெக்குருகி
143. நேசிக்கு மன்பா ரிறைகருணை யாவுடைத்தேன்
பூசிக்கும் புன்னைவனப் பூங்கனியே—வீசும்
144. கலைமதிநின் பாலிருப்பக் காத லுடையேம்
கலைமதிகொண் டேகல் கடனே—சிலையின்
145. வரைநா ளுமக்கிருப்ப மற்றெமக்கே யென்று
வரைநாண் கவர்தல் வழக்கோ—உரையுமென

---

137. விண்டு - சொல்லி. வம் - வாரும்; "கதுமெனக் கரைந்து வம்மெனக் கூஉய்" (பொருந. 101) என்பதையும் அதனுரையையும் பார்க்க.

138. அயராது - நாம் வருந்தாதபடி.

139. வேள் தன் பகை.

140. சங்க பற்பரைத் தொழுதால், அவர்கள் சந்திரனை விழுங்கி விடுவார்களென்பது கருத்து.

141. திங்கட் கொழுந்து - பிறையை.

142. செக்கச் சிவந்த - மிகச்சிவந்த; "செக்கச் சிவந்த கழுநீரும்" (**கலிங்கத்.** 54); "செக்கச் சிவந்த செழுஞ்சுடரைப் பேதமறப், பக்கத்தில் வைத்த பரிவினன்" (**குறுங்குடி நம்பி உலா**, 16-7.) மாலை ஒரு பக்கத் திருத்தும் பழம் பொருள் - **சங்கர நாராயணர்.** நெக்கு - மனம் நெகிழ்ந்து.

143. ஆவுடைத்தேன் - ஆவுடைய நாயகி.

144. கலைமதி - கலைகளையுடைய சந்திரன். கலைமதி கொண்டு - ஆடையையும் அறிவையும் கைக்கொண்டு; கலை - பொதுமகளிர்க் குரிய அறுபத்து நான்கு கலைகளுமாம்; "எண்ணெண் கலையோ ரிருபெரு வீதியும்", "எண்ணுன் கிரட்டி யிருங்கலை பயின்ற, பண்ணியன் மடந்தையர்" (**சிலப்.** 13: 167, 22: 138-9); "யாழ்முத லாக வறுபத் தொருநான், கேரிள மகளிர்க் கியற்கையென் றெண்ணிக், கலையுற வகுத்த காமக் கேள்வி" (**பெருங்.** 1. 35: 84-6); **மணிமேகலை,** 2: 18-32 ஆம் அடி முதலியவற்றாலும் இது விளங்கும்.

144-5. சிலையின் - வில்லினிடத்தே. வரைநாண் - வரையப்பட்ட நாணமாகிய குணத்தை.

146. ஊறுபட நெஞ்ச முடைவுபட வெவ்வாறு
வேறுபட மடவார் வேறொருத்தி—தேறித்

## பேதை

147. தரியாது பூவையையுந் தாயரையும் விட்டுப்
பிரியா விளம்பருவப் பேதை—தெரியாது
148. சொன்மலையச் சொல்லுமுறை தோன்றா விளங்கிள்ளை
தென்மலைய நீங்காச் சிறுதென்றல்—மென்மதுரக்
149. கண்டு படாத கரும்பு முகையவிழா
வண்டுபடாப் புன்னை வனத்தரும்பு—விண்டு
150. நிலவா மதிப்பிள்ளை நீள்வரையை விட்டுக்
குலவாத வாடைக் கொழுந்து—சுலவி
151. நடியாத பைந்தோகை நாக சுனையிற்
படியாத வோதிமப் பார்ப்பு—முடியாத
152. வானரசு நாடி மகமியற்றி னொருவன்
தான முனிவனிட்ட சாபத்தால்—ஆனமகம்
153. ஈட்டியு மெய்தா வியல்புபோற் கூடியும்
கூட்டி முடியாக் குழலினாள்—வாட்டியுயிர்
154. நீக்கா துலகை நெருக்கா துறவருந்த
நோக்காது நோக்குபொது நோக்கினாள்—சேர்க்குமங்கம்
155. முன்ன முருவாய் முதுமறையோன் முன்வந்த
தென்ன விறந்தாங் கெழுமெயிற்றாள்—மன்னர்

---

146. மடவார் வேறுபடா நிற்க.

147. பூவை - நாகணவாய்ப்புள்.

148. மலைய - மாறுபட. மலையம் நீங்கா - பொதியின் மலையைவிட்டு நீங்காத.

149. கண்டு - கற்கண்டு. முகைஅவிழா அரும்பு, வண்டுபடா அரும்பு எனக்கூட்டுக. அவிழா - அவிழ்த்தெனப் பொருள்கொண்டு, அவிழ்த்து வண்டுபடா அரும்பெனலுமாம். விண்டு - ஆகாயம்; வெளிப்பட்டு எனலுமாம்.

150. நீள்வரை - மேருமலை; வாடை மேருமலையில் தோன்றுவ தென்பர்; "வேகவனல், கொட்டுமிள வாடைக் கொழுந்தையஞ்சிப் பொன்வரையை, விட்டுவெள்ளி வெற்பை விரும்பியதும்" (243-4) என்பர் பின்; "விண்டுயிரெ லாநடுங்க வாடைதரு மேருவினும்" (**சிவஞானயோகிகள் சரித்திரம்**, 8.) சுலவி - சுற்றி.

151. தோகை - மயில். ஓதிமம் - அன்னம்.

152. ஒருவன் - நகுடன். தானம் - முதலிடத்தைக் கொண்ட. முனிவன் - **அகத்திய முனிவர்**.

154. அங்கம் - என்பு.

155. மறையோன் **திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர்**.

156. இனம்போ லுதவமனத் தெண்ணிப் புதைத்த
தனம்போ லமைந்த தனத்தாள்—மனங்கூம்பப்
157. பூவையுரை கேட்டந்தப் பூவை யுரைபயிற்றிப்
பாவையுரை யென்று பகருவாள்—ஓவியத்தை
158. நானேற்ற பாங்கியென்ன நாடியணி பூட்டவது
தானேற்றுக் கொள்ளாத் தகைமையால்—தேனேற்ற
159. அன்ன தொருபிழைகண் டன்புவையா துன்னெடினி
என்ன விளையாட் டெனமுனிவாள்—மின்னனையார்
160. காட்டுமொரு கஞ்சனையிற் கண்டதன்னை யாரென்று
கேட்டதன்கைப் பாவைதனைக் கேட்டழுவாள்—கூட்டித்
161. தழைத்த கதிரெறிக்குந் தண்டரள வண்டல்
இழைத்துவிளை யாட்டயரு மெல்லை—குழைத்தநறும்
162. புன்னைப் பொதும்பரின்கீழ்ப் புற்றா டினிதமர்ந்த
முன்னைப் பொருளான் முழுமுதலான்—மின்னைப்
163. பொருமருங்கு லாவுடைய பூங்கொம் பனையாள்
ஒருமருங்கு பச்சை யொளியான்—இருமருங்கும்
164. ஆடகநீள் குன்றத் தகல்வா னளக்குமணி
மாடநெடு வீதியின்கண் வந்திடலும்—கூடிமணிப்
165. பந்துகழங் காடாது பாடாது பைந்தொடியார்
வந்து வணங்க வணங்கினாள்—எந்தை
166. வடிந்த திருக்குழையும் வண்பவளச் செங்கேழ்
படிந்த வடிவழகும் பார்த்தாள்—அடர்ந்தசடை
167. சூட்டுநதித் தண்ணந் துறையினிலென் பாவையைநீர்
ஆட்டு மெனலு மணங்கனையார்—நாட்டமுற்ற
168. பங்கை யகலாப் பராசத்தி போலுமொரு
மங்கையவ ளென்று மறுத்துரைத்துச்—செங்கையணைத்

---

157. பூவை - நாகணவாய்ப் புள்ளின். பயிற்றி - பாவைக்குக் கற்பித்து; பாவை: விளி. ஓவியத்தை - சித்திரத்தை.

158. அது - அந்தச் சித்திரமானது.

160 - 61. கஞ்சனை - கண்ணுடி. அதன் - அந்தப் பிரதிபிம்பத்தின். தரள வண்டல் இழைத்து - முத்தாகிய மணலாற் பாவை செய்து; இப் பாவை வண்டலம்பாவையென்று வழங்கும்; "வண்டற்பாவை" (ஐங்குறு. 124); "வாலிழை மடமங்கையர், வரிமணற் புனைபாவைக்கு" (புறநா. 11: 2-3); "வன்பாற் றிரண்முத்த வண்டலின் மேல்வரு மேதமஞ்சி" (தஞ்சை. 28.) எல்லை - காலத்தில்.

162. பொதும்பர் - சோலை; மரச்செறிவு. புற்றா டினிதமர்ந்த முன்னைப் பொருளான் - வன்மீக நாதர்.

164. ஆடகநீள் குன்றத்து - மேரு மலையைப்போலவே.

167. நதித்துறை - கங்கைத் துறையில்.

168. பராசத்தி - ஆவுடைய நாயகியை. அவள் - அந்தக் கங்கை.

169. தாற்று பொழுதிலெங்கோ னம்பொனெடுந் தேர்செல்லும்
ஏற்றுசிலை நாணவே ளிறக்கினுன்—தோற்றரவிந்

## பெதும்பை

170. கூர்க்கும் பொதுநோக்கங் கூர்த்துங்கூ ராததும்போற்
பார்க்கும் பெதும்பைப் பருவத்தாள்—சேர்க்குமங்கை
171. தண்ணிசையாழ் வாங்கித் தனியன்றி மாதருடன்
பண்ணிசையப் பாடாப் பசுங்கிள்ளை—பெண்ணொருபால்
172. தந்தவரை யோடும்மைத் தாங்கும் வரைக்கினமாய்
வந்தகிளை யென்று வரம்பெற்று—வெந்திறலால்
173. அன்று சிறையை யடுவெம் பகைமுடித்தும்
என்று நெடுவா னெழுந்தோங்கிச்—சென்றுதெறற்
174. கன்ன வரைகளிரண் டாரவரை யாமுளைத்த
என்ன வரும்பு மிளமுலையாள்—துன்னும்
175. இருசுடரும் போக்கா விருளென் றிருட்கார்
மருவிய தன்னகுழல் வாய்ப்பாள்—பெருகினமைத்
176. தாங்குங்கொ லென்றுமுலை தாமரும்பிப் பார்ப்பதுகண்
டேங்குந் துடிநே ரிடையினுள்—நீங்கரிய
177. நாணமொடு கலனு நன்னித் திலவடமும்
பூண மனஞ்சிறிது பூணுவாள்—மாணிழையார்
178. ஆயமு மாமயிலு மன்னத் திளம்பெடையும்
தூய மடமானுஞ் சூழ்போதச்—சேயிழையாள்

---

169. தோற்றரவில் - தோற்றத்தில்.

170. கூர்த்தல் - கூர்மையுறுதல், மிகுதல். 171-4. நகில் வருணனை.

171 - 2. பெண்ணொருபாலைத் தந்தவரை - இமயமலை. தாங்கும் வரை - வெள்ளிமலை.

173. அடுவெம்பகை - இந்திரனை.

172 - 3. சென்று தெறற்கு வரம்பெற்று.

174. அன்ன - மேற்கூறிய.

172 - 4. தேவரீருக்குரிய இமயமலைக்கும், வெள்ளிமலைக்கும் நாங்கள் இனங்கள்; எங்களை மதியாமல் எம்முடைய சிறகுகளை அறுத்த இந்திரனை வெல்லுதற்கு வரம் தரவேண்டுமென்று மலைகளெல்லாம் தவஞ்செய்து பரமசிவனிடத்தே வரம்பெற்று இரண்டு மலைகளின் வடிவமாக முளைத்து மேல் நோக்கி யெழுந்தாற்போன்ற நகில்கள்.

175. வாய்ப்பாள் - பொருந்தியிருக்கப்பெற்றவள்; "வரையர மாதரின் வாய்ப்பாள்" (குலோத். உலா. 189.)

176. அரும்பி - தோன்றி. துடி - உடுக்கையை.

177. நல் நித்தில வடமும்.

176 - 7. நீங்கரிய நாணம்: "பெண்பா லவர்கட் கணியாய்ப்பிரி யாத நாணும்" (சீவக. 1961.)

178. ஆயம் - மகளிர்கூட்டம்.

179. வட்டம் பெறும்பளிக்கு மண்டபத்து வந்திருப்ப
இட்டம் பெறவிணங்கு மேந்திழையார்—கட்டழகி
180. சங்கம் பகுந்தகுழைச் சங்கரர் சங்கரியார்க்
கங்கம் பகுந்த வருள்பாடிச்—செங்கை
181. மணிக்கழங் காடுக மென்ன வயங்கும்
அணிக்கிணங்கு கொங்கைமல ரன்னம்—பணிக்குமுக்கண்
182. மாமருந்து புற்றிடத்து மண்மருந்தா லெப்பிணியும்
போமருந்து மென்றுன் புகழ்பாடித்—தாமத்
183. தசைந்த மணிக்குழைக ளங்குமிங்கு மாட
இசைந்த மணிக்கழங்கா டெல்லே—பசந்தகொடி
184. பங்கோன்கைச் சூலப் படையோன் வரராசை
எங்கோன் மணிமறுகி லெய்துதலும்—அங்குக்
185. கழங்காடல் விட்டுக் கரும்பனையா ரோடும்
வழங்காடல் வேற்கண் வணங்கிச்—செழுங்குதலை
186. மானனையீர் பங்கில் வனிதையெவள் செஞ்சடைமேற்
றேனனைய கோதையெவள் செப்புமென—மேனிவந்த
187. வேதத் தனிமுதல்வன் விதி தனைக்கடந்து
போதத் தொடைமடக்கிப் போயினன்வேள்—வேதன்

## மங்கை

188. படியெடுப்பா வைத்துப் படைப்பவழ கெல்லாம்
வடிவெடுத்து வந்ததொரு மங்கை—தொடிவளைக்கைக்

---

179. பெதும்பை வந்திருப்ப. இட்டம் - இஷ்டம். கட்டழகி : விளி.

180. சங்கத்தை வகிர்ந்து அமைத்த குழையையுடைய. அங்கம்பகுந்த- திருமேனியைப் பகிர்ந்து கொடுத்த: "பாகம் பகுந்து பரையிருப்ப வேள் பகழிக், காகம் பகுந்தன் றளித்ததுவும்" (243); "பரிந்திடுநுங் கவிதைகளிற் பாதி பகுந்து", "தாங்கருமன் பொடுபகுந்து சாத்தினர் தமிழ்மாலை"(திருவால. காரியார் நாரியார். 12, 14.)

181. கழங்கு ஆடுகம் - கழற்சிக்காயை ஆடுவோம். அன்னம் - பெதும்பை. பணிக்கும் - கட்டளையிடும்.

181 - 2. முக்கண் மாமருந்து - சிவபெருமான்; எப்பிணியும் போம். அருந்துங்கள். தாமம் - ஒளி.

184. வரராசை - இத் தலத்தின் பெயர்.

185 - 6. கரும்பை அனையார். வழங்கு ஆடல் வேல்கண் - ஆள் வழங்குதலை வெற்றிகொள்ளுகின்ற வேல்போன்ற கண்; "ஆள்வழக் கொழிய நீண்ட வணிமலர்த் தடங்கண்" (சீவக. 461); "ஆள்வழக் கறுத் திடு நெடுங்க, ணம்பரத்தியர்" (திருநாகைக். அதிபத்த. 10.) பங்கில் வனிதை எவள் - பங்கிலுள்ள இந்தப் பெண் யார்?

187. போத - செல்ல. வேள் போயினன்.

188. படியெடுப்பு - பிரதியை எடுத்தல்; படி - பிரதி; "படிச்சந்த மாக்கும் படமுள வோநும் பரிசகத்தே" (திருச்சிற். 78.) படியெடுப்பா......

189. காவிக் கிளையைவென் ற கண்ணி யரவிந்தத்
தேவிக் கிளைய செழும்பூவை—தாவும்

190. முரசளிக்கும் வேலைமதன் மூவுலகும் வெல்ல
அரசளிக்க வந்தமட வன்னம்—விரைகமழ்பைங்

191. தாட்கொண்ட கஞ்சமுகை தன்னை வென்று வாரணிய
நாட்கொண்ட வட்ட நகிலத்தாள்—வேட்கைபொர

192. வாளை மருட்டி வடிபூங் குழைதாவி
வேளை மருட்டும் விழியினாள்—நீளும்

193. படியிருந்த வேலை படிந்தமுகில் வந்து
குடியிருந்த தன்ன குழலாள்—தொடியின்

194. கழைபோற் றிரண்டு கவினுமருந் தோளாள்
இழைபோ னுடங்கு மிடையாள்—உழைவிழியார்

195. தண்ணென் மதிசூழ்வெண் டாரகைபோற் பாங்குவரப்
பெண்ணமுத மன்னாள் பெரிதுவந்து—வண்ணம்

196. பொருத்துநவ ரத்தினம் பொற்பா லிலங்கத்
திருத்துந் திருவூசல் சேர்ந்தாள்—வரித்தடங்

197. கண்ணொளி பாயக் கதிர்நீல வூசலென
நண்ணலு நோக்கி நகைமுகிழ்த்தாள்—வெண்ணிலவின்

198. அந்தண் ணகையொளிபாய்ந் தவ்வூச லாரநிரை
தந்தமணி யூசலெனத் தான்விளங்க—வந்துமறிந்

---

மங்கை : "தெரிவை மார்க்கொரு கட்டளை யெனச்செய்த திருவே", "சட்டகந் தன்னை நோக்கி யாரையுஞ் சமைக்கத் தக்காள்" (கம்ப. சித்திரகூட. 33, நாடவிட்ட. 38.) தொடி - கங்கணம். வளை - வளையல்.

189. காவிக் கிளை - கருங்குவளை மலரின் இனங்களை.

189 - 90. தாவும் வேலை - கடல். அளிக்கும் வேலையை முரசாக உடைய மதன்.

191. தாள் - தண்டு. கஞ்சமுகை - தாமரையரும்பு. வேட்கை - விருப்பம்.

192. வேளை - மன்மதனை.

193. வேலை படிந்த முகில் - கடலிற் படிந்த மேகம் ; எழுவாய்.

193 - 4. தொடியின் கழை - பூணையுடைய மூங்கில் ; தொடி, தோள் வளைக்கு உவமை.

194. உழை - மான்.

195. தாரகை - நட்சத்திரம்.

194 - 5. உழைவிழியார் பாங்குவர. மங்கைக்கு மதியும், தோழியர்க்கு நட்சத்திரமும் உவமை ; 'ஒண்ணுதன் மகளிர் தற்சூழத் தாரகை நடுவண் தண்மதிபோலச் செல்வாளென்பது' (இறை. 2, உரை.)

196. ஊசலைச் சேர்ந்தாள்.

197. பாய - பாய்தலால். 198. ஆர நிரை - முத்தின் வரிசை.

199. தோடியிரு கண்க ளொளிர்குழை யூசலிருந்
தாடி யசையவசைந் தாடுதலும்—பேடைமயில்

200. அன்னம்போன் மின்னு ரமையு மமையுமெனப்
பொன்னஞ் சிலம்பிரங்கல் போதாதோ—பின்னளகக்

201. காட்டுப் பொறிவண்டுங் கைவண்டும் போதுமெனக்
கேட்டுப் புலம்புவது கேளாதோ—வேட்டாடல்

202. இங்கொழிக வென்ன விசைந்தா டலையொழிந்தாள்
அங்குமகிழ் தந்திருக்கு மவ்வளவில்—பொங்குததி

203. மண்ணிடந்த மாலும் வனசரனு மெய்யன்பாற்
கண்ணிடந்து சாத்தவருள் கண்ணுதலோன்—எண்ணில்

204. சுரராசைப் பொற்பமைந்த தொன்னகர மன்ன
வரராசைப் புன்னை வனத்தான்—முரசவொலி

205. ஆர்ப்பவனி யெங்கு மதிர வரத்தூண்டும்
தேர்ப்பவனி சென்று தெரிசித்தாள்—கூர்ப்பக்

206. கலையாய் வளைநிறைநாண் கைவிட்டாள் செம்பொற்
சிலையான் மறுவீதி சென்றான்—உலையார்ந்த

207. வெங்கனலி விட்ட மெழுகா மெனவெதும்பி
அங்க முருகி யயர்வுற்றாள்—வங்கத்

## மடந்தை

208. தெழுவாரி வையத் தெவர்க்கு மதனூல்
வழுவாம லோது மடந்தை—முழுதும்

209. வடிவுபெறு மன்று மதன்சூட்ட வைத்த
முடியைநிக ரான முலையாள்—படிமிசையோர்

---

200. அமையும் - போதும். என - என்று.

201. கை வண்டு - வளை.

202. என்ன - என்று தோழிமார் சொல்ல. மகிழ்தந்து - மகிழ்ந்து. பொங்கு உததி - கடல்.

203. மண் இடந்த - மண்ணைப் பெயர்த்தெடுத்த. வனசரன் - வேடராகிய கண்ணப்பர்.

204. சுரர் ஆசை பொற்பு - தேவர்களுடைய ஆசைக் கிடமாகிய அழகு. தொன்னகரம் - அமராவதி. வரராசையாகிய புன்னைவனம்.

204 - 5. முரசவொலியாகிய ஆர்ப்பு. அவனி எங்கும்.

206. கலையையும் ஆராயப்பட்ட வளையையும் நிறையையும் நாணையும் கைவிட்டாள்; ஆய் - ஆராய்ந்த; நிறை : "நிறையெனப் படுவது மறை பிற ரறியாமை" (கலி. 133 : 12) என்பர். செம்பொற்சிலை - மேருமலையாகிய வில்.

207. அங்கம் - உடம்பு. வங்கத்து - கப்பலை யுடையதாய்.

208. மதனூல் - மன்மதனுக்குரிய நூல்; "சாற்று மதனூ றலைகண்டும்", "மதனூல் விருத்தி" (சொக்க. உலா. 394, 449); "வெஞ்சிலை யனங்க வேத முறைமையான் மேவி னரே" (வி. பா. சம்பவச். 97); "கணிகையர் முகத்திற் கூறுங் காமனு கமங்கள்" (திருக்குற்றலப். மந்தமாருதச். 41.)

210. ஆவிதனை யுண்ணுத வம்பொருநான் கல்லாத
காவிதனை வென்றகருங் கண்ணிஞள்—பூவலருங்
211. கொத்துத் தொடையல் குவலயத்தோ ராவியொடு
வைத்துச் செருகு மலர்க்குழலாள்—உத்தரியப்
212. பொற்றனவெற் பன்ன புணர்முலையைத் தாங்குதலால்
மற்றுளதென் றேது மருங்குலாள்—சிற்றிடை
213. மின்னெத்த நல்யாழ் விறலியரும் பாங்கியரும்
தன்னெத்த வஞ்சியருந் தற்சூழ—முன்னுற்று
214. முந்திருக்குங் காணுத முக்கட் பசுந்தேறல்
வந்திருக்கும் புன்னை வனத்தெய்தி—இந்துநுதற்
215. பாங்கி யொருத்திதரப் பண்ணிசையப் பாடுதற்கு
வாங்கி மகரயாழ் வாசித்தாள்—பாங்கிருந்த
216. பூவைபசுங் கிள்ளையுடன் புட்குலங்க டாமிருந்த
காவை யகன்று கலந்துறையப்—பாவையும்
217. தம்மின மென்று தழீஇக்கொண் டனவென்ன
மைம்மலிவேற் கண்ணுர் மறுத்துரைத்துச்—செம்மை
218. மகரயா ழின்னிசைக்கு வந்தன வென்று
பகர மனங்கனிந்து பைந்தேன்—நிகரின்றி
219. இன்னிசையாழ் பின்னு மிசைத்தா ளிசைப்பளவில்
முன்னிருவர் காணு முடிவிலான்—பொன்னிதழி

---

210. காவி - கருங்குவளைமலர்; காவிமலர் ஆவியை யுண்ணுமென்பது, "முழுநீலங், கொல்லுமத னம்பின் குணம்" (இரத்தினச். 11) என்பதனுலும் விளங்கும்.

211. தொடையல் - மாலை; தொடையலை ஆவியொடு வைத்துச் செருகுங்குழல்; "செக்கச் சிவந்த கழுநீருஞ் செகத்தி விளைஞ ராருயிரும், ஒக்கச் செருகுங் குழன்மடவீர்" (கலிங்கத். 54); "உருகுஞ்சுர ருயிருண்டன வுணர்வுண்டன வொழுகத், திருகுங்குழ லரமங்கையர் திறமின்கடை திறமின்" (தக்க. 13.) உத்தரியம் - உத்தரீயம்.

212. பொன் தனவெற்பு - மேருவை. மற்று: அசைநிலை. தாங்குதலால் உளதென்று கூறப்படு மருங்குல்; "கலைக்கி ழகலல்குற் பாரம தாரங்கண் ணர்ந்திலங்கும், முலைக்கீழ்ச் சிறிதின்றி நிற்றன் முற்றுது" (திருச்சிற். 59.)

213. விறலியர் - விறல்பட ஆடும் மகளிர்; விறல் - மெய்ப்பாடு.

214. இருக்கும் - வேதமும். தேறலிருக்கும் புன்னைவனமென்பது ஒரு நயம்.

216. பூவை - நாகணவாய்ப்புள். காவை - சோலையை. புட்குலங்கள் கலந்துறைய. பாவை - மடந்தை.

215-6. பாங்கிருந்த பூவையுடன், பாங்கிருந்த கிள்ளையுடன்.

217. என்ன - என்று மடந்தை கூற.

217-8. வேற்கண்ணுர் பகர.

219. இதழி - கொன்றை.

220. ஏந்துமிரு நான்குபுயத் தெம்மான் மணிமறுகிற்
போந்த பவனியெதிர் போய்ப்பணிந்தாள்—பாய்ந்தபொறிப்
221. பையா டரவப் பணியான் மழுவிருந்த
கையான் மணித்தேர் கடாவினுன்—பெய்வளைக்கை
222. அஞ்சொலிளங் கிள்ளை யயர்ந்தா ளதுகண்டு
விஞ்சுகொடி மாட மிசைக்கொடுபோய்—வஞ்சியரப்
223. போதுதழல் கீழ்விரித்தாற் போன்ற மலரமளி
மீது கிடத்த வெதும்பினுள்—சீதக்

## அரிவை

224. குமுத மனையவிதழ்க் கோதைதிரை வேலை
அமுத மனைய வரிவை—திமிரமென
225. நெய்த்துச் சுருண்டு நெறித்துக் கடைகுழன்று
மைத்துந் திரண்ட மலர்க்குழலாள்—முத்த
226. வடங்கொண்டு கச்சறப் பூரித்து மார்பத்
திடங்கொண்ட கொங்கை யிணையாள்—விடங்கொண்டு
227. சேலைத் துரந்து திகழ்பூங் குழைதடவி
வேலைத் துரந்த விழியினுள்—தாலமிசைத்
228. தேசழகு பெற்றமணித் தேர்த்தட்டுஞ் சேரிளைஞர்
ஆசையும் போலகன்ற வல்குலாள்—வாசமலர்ப்
229. பொன்னைநிக ராக்கிப் புயலோ டியங்கியொளிர்
மின்னையுருக் கொண்டனைய மேனியாள்—பொன்னிலத்து
230. மாமகளிர் சூழ்ந்ததரு மங்கையென வாரிதிப்
பூமகளிர் சூழப் பொலிந்திருப்பாள்—காமர்
231. ஒருகமல மீதிரண் டுற்பலமுந் தேறல்
வருகுமுத மும்பூத்த வல்லி—திருவுருவம்
232. வாடாத செவ்வி மகளிரொடும் பூங்காவில்
ஏடார் மலர்கொய்ய வேகுதலும்—கோடிய

---

222. கிள்ளை - மடந்தை. வஞ்சியர் - தோழிமார்.

224. கோதை - மாலைபோல்வாள்; "கோட லெதிர்முகைப் பசுவீ முல்லை, நாறிதழ்க் குவளையோ டிடைப்பட விரைஇ, ஐதுதொடை மாண்ட கோதை போல, நறிய நல்லோள்" (குறுந்தொகை, 62.) திமிரம் - இருட்டு.

225. கடைகுழன்று - கடை சுருண்டு. மைத்து - கறுத்து.

227. துரந்து - செலுத்தி. தாலம் - பூமி.

228. தேசு - ஒளி; இயற்கை யழகுமாம்; பரி. 12 : 21.

228 - 9. மலர்ப்பொன்னை - திருமகளை. 230. தருமங்கை-இந்திராணி.

231. கமலம் முகத்திற்கும், இரண்டு உற்பலம் கண்களுக்கும், குமுதம் வாய்க்கும் உவமைகள்; உற்பலம் - கருங்குவளை; குமுதம் - செவ்வல்லி.

232. ஏடு - பூவிதழ். கோடிய - வளைந்த.

233. விற்றிகழ் வாணுதலி மென்சா யலுமொழியும்
சிற்றிடைதள் ளாடுந் திருநடையும்—கற்றறிய
234. வன்னக் கலாப மயிலும் வரிக்குயிலும்
அன்னக் குழாமு மருகுவரப்—பன்னும்
235. இனிய நரம்புளரு மின்னிசையா மென்னப்
பனிமலர் வண்டுகள்பண் பாடக்—கனியுதவு
236. கொம்பர் மிசையிருந்த கொண்மூ முழவதிர
அம்பொதியத் தென்கா லசைத்ததளிர்—இம்பருற
237. வாவெனல் போலசைய மாதவிப் பந்தரின்கீழ்
ஏவனைய கண்ணா ளினிதிருந்து—தேவர்
238. பெருமானைச் சங்கரனைப் பெம்மானைப் பங்கில்
ஒருமானை வைத்தானை யுன்னித்—திருமானை
239. அன்னாள் சுரும்பை யழைத்திதழி வாங்கிவரச்
சொன்னாள் விடுத்தா டுயருற்றாள்—பொன்னனையார்
240. ஆற்றவு மாற்றா தயர்ந்துருகு மவ்வளவிற்
கூற்றமு மஞ்சுங் குரைகழலான்—மாற்றலர்
241. முப்புரமு நீற முகிழ்த்த திருநகையான்
எப்புவியும் போற்றமறு கெய்துதலும்—துப்பிதழி
242. சென்று தொழுதாள் செழுமதித் தீப்பொரு
தன்று நதியோ டணிந்ததுவும்—என்றுமொரு
243. பாகம் பகுந்து பரையிருப்ப வேள்பகழிக்
காகம் பகுந்தன் றளித்ததுவும்—வேகவனல்
244. கொட்டுமிள வாடைக் கொழுந்தையஞ்சிப் பொன்வரையை
விட்டுவெள்ளி வெற்பை விரும்பியதும்—விட்டு

---

233. வில் திகழ். நுதலியினது.

233-4. சாயல் முதலியவற்றிற்கு மயில் முதலியவை நிரனிறையாகக் கொள்ளப்படுவன.

236. கொண்மூ - மேகம். முழவு - மத்தளம்; "விண்ணதி ரிமிழிசை கடுப்பப் பண்ணமைத்துத், திண்வார் விசித்த முழவொடு" (மலைபடு. 2-3); "முகிலிசை யெனமுழா முரன்று விம்மவும்" (சூளா. நகரச். 6.) இம்பர் - இங்கே.

237. மாதவி - குருக்கத்தி. ஏவு - அம்பு.

239. சுரும்பை - வண்டை. தூது விடுத்தாள்.

240. கூற்றமும் அஞ்சும் குரைகழலான்: "கூற்றங் குமைத்த குரை கழற்கால்" (சிதம்பரச்செய். 8.) மாற்றலர் - பகைவர்.

241. நீற - பொடியாக. மறுகு - வீதியில். துப்பு - பவழம். இதழி - இதழையுடையாள்.

242. மதித்தீ - சந்திரனாகிய நெருப்பை. மதியை நதியோடணிந்தது.

243. பகுந்து - பகிர்ந்து. வேள் பகழிக்கு - மன்மத பாணத்திற்கு. அன்று அளித்தது.

244. பொன்வரையை - மேருவை.

245. மறந்தபடி யோவெளியேன் மற்றவையா லாவி
இறந்து படுவதனை யெண்ணீர்—சிறந்தமுழச்
246. செங்கரனே மிக்க திகம்பரனே சீராசைச்
சங்கரனே யென்று தளர்வுற்றாள்—அங்கீரனும்
247. சோதி கடந்த சுடர்மணி மாளிகையின்
வீதி கடந்தகல வேறொருத்தி—காதல்

## தெரிவை

248. உருவழகுஞ் செஞ்சொ லுரையழகும் பெண்மைத்
திருவழகும் பெற்ற தெரிவை—மருவிருந்த
249. மாலிகை வைத்து வகுத்துச் செருகுபசுஞ்
சோலையைவைத் தன்ன சுரிகுழலாள்—ஓலையின்மேல்
250. ஓட்டி யிளைஞ ருயிரனைத்து முண்ணுமல்
வெட்டியுடன் மீளும் விழியினாள்—வட்டநெடும்
251. பார்சொல்லக் கூடாப் பரப்பி னளவையும்
நேர்சொல்லக் கூடா நிதம்பத்தாள்—கார்செல்லும்
252. எட்டு வரையோ டிரண்டுவரை யுண்டெனவார்
கட்ட வமையாக் கனதனத்தாள்—மட்டவிழ்பூங்
253. காவிநீ ராடல்வேற் கண்ணி செழுங்கமல
வாவிநீ ராட மனம்வைத்தாள்—ஆவிநீர்
254. அன்னங் கிளிகளொடு மார்கலி யாரமுதம்
என்ன மடவர லு மெய்தினாள்—அன்னமொரு
255. கோடி படிந்தவெனக் கொங்கைக் குடங்கவிழ்த்தி
ஆடிய மாதருட னாடினாள்—கூடகக்கை

---

245. அவையால் - மதி, வேள்பகழி, வாடையென்பவற்றால்.

246. சீராசை - ஸ்ரீராசை; **சங்கரநயினார்கோயில்**; 262. அங்கு அரனும்.

247. சோதிகள் தந்த.

249. மாலிகை - மாலை. குழலுக்குச் சோலை உவமை; "அளக மலர்க்கா" (**சொக்க. உலா.** 321.) ஓலை - காதோலை.

252. எட்டுவரை - குலாசலம் எட்டு. வார் - கச்சு. அமையா - அடங்காத. மட்டு - மணம்.

253. காவி நீர் ஆடல் - கருங்குவளையின் தன்மையை வென்ற; ஆடல் - வெற்றி. வாவி - தடாகம்.

254. அன்னம் - அன்னப் பறவை. ஆர்கலி - கடல்.

255. படிந்த - படிந்தன. கொங்கைக்குடம் - கொங்கையாகிய குடத்தை. குடத்தை மிதப்பாகக் கொண்டு ஆடுதல் மரபு: "துங்க முலைப் பொற்குடங்கொண்டு தூநீர் நீந்தி விளையாடும்" (**மீ. பிள்ளைத்.** நீராடற். 6); "மானாநீ ரரணஞ் சூழ்ந்த மன்னவ னுளத்தி னூடே,...கொங்கைக் குடத் தொடு நீந்திப் புக்காள்" (**நைடதம்**, அன்னத்தைக். 16.)

256. அள்ளிநறுந் தெண்ணீ ரவர்கருந் தாரைதொறும்
வெள்ளிநெடுந் தாரையென வீசினாள்—கள்ளமுறும்
257. பைங்குவளை மீதிலிரு பங்கயம் பூத்தவெனப்
பொங்கு வளைக்கரத்தாற் பொத்தினாள்—இங்கொழிக
258. என்றார் நகைத்தா ணகைத்த விளநிலவாற்
குன்றா வனசங் குவிதரலும்—துன்று
259. கரையேறிப் பல்கலனுங் கைபுனைந்து மாலை
விரையேறு சந்தன் மிலைந்து—பரிவாய்க்
260. கனியிருந்த சொல்லியர்க்குக் காமா கமநூல்
இனிதிருந்து கற்பிக்கு மெல்லை—தனிமுழங்கி

## தசாங்கம்

261. விண்ணீர்ப் புயலுறங்கு வெள்ளருவித் தென்வரையும்
தெண்ணீர்ப் பொருனைத் திருநதியும்—பண்ணீர்மை
262. தந்து கொழிக்கத் தழைக்குந் தமிழ்நாடும்
நந்துதவழ் சீராசை நன்னகரும்—முந்திய
263. பேரா யிரந்துதிப்பப் பெற்ற மறைப்பரியும்
ஈரா யிரங்கோட் டிருங்களிறும்—சேர்தரும்
264. ஆவி யனையபதி னாறா யிரங்கொம்பு
மேவி வளரும் விடைக்கொடியும்—பூவார்
265. திருக்கொன்றைத் தாமமுந் தெய்வ முரசும்
பெருக்குதன தாணையும் பெற்றோன்—செருக்கினால்
266. ஏகவனத் தான்செங்கை யேற்றவனத் தான்றியா
நாகவனத் தான்பவனி நண்ணுதலும்—தோகையன்னார்

---

256. கருந் தாரை - கரிய கண்கள். 257. கண்ணைப் பொத்தினாள்.
258. வனசம் - தாமரை. 259. விரை - வாசனை. 260. நூலை.
261. தென்வரை - பொதியின்மலை ; "தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்" (பு. வெ. சிறப்புப். 2) ; "தென்மலைச் சந்தும்" (சிலப். 8 : 19.) பொருனை - தாம்பிரபன்னிநதி.
262. நந்து - சங்கு.
263. களிறு - ஐராவணம்; "நிரைநிரை, ஆயிரம் வகுத்த மாயிரு மருப்பின், வெண்ணிறச் செங்கண் வேழமும்" (**கோயினான்மணி.** 4.)
264. ஆவி - உயிரை. பதினாறுயிரங்கொம்பு - நரகாசுரனால் சிறையில் வைக்கப்பட்ட பதினாறுயிரம் இராச கன்னியரை. **செவ்வைச்சூடுவார் பாகவதத்தில்,** 10-ஆம் கந்தத்தில் நரகாசுரனைக்கொன்ற அத்தியாயத்திற் **கண்ணபிரான்** பதினாறுயிரம் இராச கன்னியரை மணந்த வரலாறு காணப்படும்.
265. தாமம் - மாலை.
266. ஏக அனத்தான் - ஒற்றை அன்னப்பறவையையுடைய பிரமன் : கை ஏற்ற வல் நத்தான் - திருமால் ; நத்து - சங்கம். நாகவனம் - புன்னை வனம்.

267. சூழ்ந்துவரச் சென்று தொழுதா டொழுதவுடன்
ஆழ்ந்த விரகத் தழுந்தினாள்—வீழ்ந்தயர

268. ஆரிதழி திங்களணிந்தா னெடுமகன்றான்
தேரிளந் தென்றற் சிலையானும்—பேரிளம்பெண்

## பேரிளம் பெண்

269. பொன்னிசைய மேவும் புகலியர்கோன் பாட்டிசையும்
இன்னிசையும் யாழி னெடுத்திசைப்பாள்—முன்னவன்பொற்

270. றாளாணை யைச்செலுத்துந் தன்மையா ளாண்மையினால்
வேளாணை யைச்செலுத்தா வீறுடையாள்—நாளும்

271. உறுதுயி றந்திலவென் றோர்ந்துமை தீட்டா
விறலயில்வே லன்ன விழியாள்—இறையொருபாற்

272. சேர்த்த திருப்பிறைதான் சேர்த்தற் கரிதென்று
கூர்த்து வனையாக் குழலினாள்—பேர்த்துடைந்தும்

273. ஏங்கியு நொந்துமெம்மை யேந்திய தென்றுதாம்
தாங்கிய வாரந் தருவதற்கும்—ஓங்கலெட்டும்

274. பொற்பழித்து விண்ணிற் பொருப்பின்மை யாற்பிலத்தும்
வெற்புளதோ வென்றாய்ந்து வெல்வதற்கும்—முற்றும்

275. கலைசாய்த்து நேரிட்ட கச்சினையுஞ் சாய்த்துத்
தலைசாய்த்து நோக்குந் தனத்தாள்—மலைசாய்த்து

276. வாரழகு பெற்றமுலை மாமங்கை யர்க்கரசி
பேரழகும் பேரற்பும் பெற்றுளாள்—சேரிளங்கால்

277. சுற்றத் திருந்து சுடரெறிக்கும் வெண்ணிலா
முற்றத் திருந்து முகிழ்நகையாள்—கற்றுணர்ந்து

278. தென்புகலி வேந்து செழியனுடற் கூனிமிர
முன்புகலுஞ் செஞ்சொன் முதுதமிழும்—வன்புலையர்

---

267. வீழ்ந்து அயர.

268. ஆர் - ஆத்தி. இளந் தென்றற்றேர் - இளந்தென்றலைத் தேராக வுடைய. சிலையான் - மன்மதன். சிலையான் திங்களணிந்தானெடும் அகன்றான்.

269. புகலியர் கோன் - சம்பந்தமூர்த்தியினது. முன்னவன் - சிவ பெருமானது. 270. வீறு - வேறொன்றற் கில்லாத அழகு.

271. மை - அஞ்சனம். இறை - இறைவன்.

272. கூர்த்து - ஆராய்ந்தறிந்து.

273. ஆரம் - முத்தமாலையை. ஓங்கல் - மலை. 274. பொற்பு - அழகு.

276. பேரற்பும் - பெரியஅன்பினையும். இளங்கால் - தென்றல்; "இளங்காற் றூதன்" (சிலப். 8 : 9.)

278. புகலிவேந்து - சம்பந்தமூர்த்தி; புகலி - சீகாழி. செழியன் - கூன் பாண்டியன். புலையர் - சமணர்.

279. கற்றுணையாச் சேர்த்துக் கடற்படுத்த வஞ்செழுத்து
நற்றுணையென் றோதினோ னற்றமிழும்—முற்றுலகும்

280. அண்டத் தொகையு மருமறையும் போற்றுதிருத் [மன்றில்
தொண்டத் தொகைவகுத்தோன் சொற்றமிழும்—பண்டு

281. ஆடினோன் பூண்டெழுத வாய்ந்ததுறை நானூறு
பாடினோன் பாடிய பைந்தமிழும்—பாடியிரு

282. கொங்கை யசையக் குழையசையக் கோலவளை
அங்கைமிசை யம்மானை யாடுமென்றாள்—உங்களிலே

283. ஆட லமையு மமையுமென வோங்குசித்ர
கூடமிசைச் சென்று குலாவினாள்—நீடுபுன்னைக்

## சித்திரசாலைக் காட்சி

284. காவையோ சித்துவந்து கண்ணுதலை யாவுடைய
பாவைபூ சித்த படிபாரீர்—பாவைதனக்

285. கன்று வடிவமிரண் டாக விறைவனென்றாய்
நின்ற கருணை நிலைபாரீர்—சென்றுதொழ

286. இவ்வுலகிற் சங்கபற்ப ரென்னு மரவரசர்க்
கவ்வுருவந் தந்த வருள்பாரீர்—செவ்வேல்

287. அரசன் வழுதிபுரி யாலயமும் வானோர்
பரவு திருநகரும் பாரீர்—விரைகமழும்

288. ஆர வரைமுனிக்கோ ரஞ்செழுத்தி னுண்மைநிலை
தேர வுரைத்த திறம்பாரீர்—சோரவிடைப்

---

279. கல்துணையா - கல்லைத் துணையாக. அஞ்செழுத்து - பஞ்சாட்சரம். ஓதினோன்: **திருநாவுக்கரசர்.**

281. துறை நானூறு - **திருச்சிற்றம்பலக் கோவையாரை.** பாடினோன் - **திருவாதவூரடிகள்.**

283. ஆடல் அமையும் - அம்மானையாடுதல் போதும். சித்ர கூடம் - சித்திரங்கள் வரைந்திருக்கும் சாலை; இதனை, "எழுதெழி லம்பலம்", "எழுத்துநிலை மண்டபம்" (18 : 28, 19 : 53) என்பர் **பரிபாடலில்.**

283 - 4. புன்னைக் காவை - புன்னை வனத்தை.

284 - 8. சித்திரசாலையிலுள்ள இத் தலவரலாற்றைப் பற்றிய ஓவியக் காட்சி கூறப்படும்.

285. வடிவமிரண்டாக - **சங்கர நாராயணராக.**

286. அவ்வுருவம் - சங்கரநாராயண வடிவத்தை.

287. அரசனாகியவழுதி - **உக்கிரப் பெருவழுதி.**

288. ஆரவரை - சந்தனச் சோலைகளையுடைய பொதியின்மலை. முனிக்கு - **அகத்திய முனிவருக்கு.**

## வடமலைப் பிள்ளையன் பணிகள்

289. பாகனுமை யாவுடைய பாவைதிருச் சந்நிதியில்
மாகமுயர் பொற்கம்ப மண்டபமும்—தோகையெ...

290. மாடகநல் யாழிசைத்து மாதர் நடம்புரிய
ஆடகத் தூணிரைத்த வம்பலமும்—சூடுமுடி

291. அண்ட ருறையு மகல்வான் முகடுரிஞ்சும்
கொண்டல் படியுநெடுங் கோபுரமும்—எண்டிசைநெல்

292. இட்ட களஞ்சியமு மேற்ற மடைப்பளியும்
வட்டநெடு வான்றோய் மணிமதிலும்—கட்டுகொடிப்

293. பொற்றடந் தேருமந்தப் பொற்றடந்தேர் மண்டபமும்
மற்றை நிருதிதிக்கு மண்டபமும்—முற்றவளம்

294. சேர்ந்தமணி வீதித் திருமடமும் பூந்தேறல்
வார்ந்தொழுகும் பூங்கா வனங்களும்—சார்ந்திலங்கு

295. கூலமணித் தெப்பக் குளமுமணி மண்டபமும்
சீல மறையோர் திருமனையும்—நீலமிடற்

296. றெந்தைவெள்ளிக் குன்றநடந் தேந்தவர ராசைதனில்
வந்ததன்ன வெள்ளிவரை வாகனமும்—புந்திமகிழ்

297. வெண்கதிர் வெள்ளிவெற் பன்னவிடை வாகனமும்
வண்கனகத் திந்திரவி மானமும்—ஒண்சுடர்

298. கொண்டுதிகழ் வெள்ளியங் கோளரி வாகனமும்
மண்டு திறற்பூத வாகனமும்—தொண்டருடன்

299. வானவர் போற்றுமொரு மண்டலவி ழாவுமணி
—ஆன வடமலை யாரமும்—ஞானவொளி

300. அன்னையுடை யாட்குரத்ன வங்கியு மெய்யன்பை
முன்னு மறுபத்து மூவரும்—மன்னுகுண

301. சீலனுயர் காவைத் திருமால் வடமலைபூ
பாலன் வகுத்த படிபாரீர்—ஞாலமிசை

302. இன்ன வளனும் புதுமையுமெங் குள்ளவென்
றன்னமனை யாளிருக்கு மந்நிலையில்—மின்னும்

---

289. மாகம் - ஆகாயம். தோகையென - மயில்போல.

290. ஆடகத்தூண் - பொற்றூண்களை. அம்பலம் - நாடகசாலை.

291 - 2. நெற்களஞ்சியமும்.

293. நிருதி திக்கு - தென்மேற்கு மூலை. முற்ற - முடிய.

294. தேறல் - தேன். 296. வெள்ளிவரை வாகனம் - கைலாய வாகனம்.

297. கனகத்து - பொன்னாலாகிய. 298. கோளரி - சிங்கம்.

300. உடையாட்கு - ஆவுடைநாயகிக்கு.

301. காவை காவனூரென்பதன் மரூஉவென்பர்.

303. மழுவலத்தா னுவுடைய மானிடத்தான் கொன்றை
முழுமலர்த்தார் வேணி முடித்தான்—எழுபரவை

304. ஆல மணிமிடற்று னம்பொன் மணிநெடுந்தேர்
கோலமணி வீதி குறுகுதலும்—நீலவிழி

305. சென்றுள் பணிந்து நியங்கிஞெ ணட்டுயிர்த்து
நின்று ளயர்ந்தா ணிலைசோர்ந்தாள்—துன்றுபொழிற்

306. கூழைப் பதிவாழ் குழகனே கோட்டுமதிப்
பேழைச் சடைமவுலிப் பெம்மானே—ஏழையேற்

307. கம்புலி யார மழலாய்க் கொதியாமற்
பம்புமொலி யாவி பருகாமற்—கும்பமுனி

308. முன்னு மருந்து படியிந்த முந்நீரோ
டின்னுமருந் தென்ற லிசையாதோ—துன்னுபுகழ்

309. வென்றுபோ ராடிமதன் விற்கரும்பைக் கல்லானைக்
கன்றுபோ லின்றளித்தா லாகாதோ—இன்றுனது

310. சின்னத் துடன்பகைத்தோன் சின்ன மெதிர்பிடித்தான்
என்னத் திருவுளத்துக் கேருதோ—நின்னிதழித்

311. தாரேனுந் தாராத் தகைமையென்கொ லென்னவிவ்வா
றேரேழ் பருவத் தொளிவனையார்—நேர்போதக்

312. கண்ணுதலான் புன்னைநறுங் காவுடையா ஞேர்பாகத்
தொண்ணுதலான் போந்தா னுலா.

---

304. நீலவிழி - நீலவிழியையுடைய பேரிளம் பெண்.

306. கூழைப்பதி : சங்கரநயினர் கோயிலின் திருநாமங்களுள் ஒன்று. பேழைச்சடைமவுலி - பேழைப் பெட்டிபோலும் சடைமுடி; "பேழைச் சடையர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே" (தே. சுந்தர. கடவூர் மயானம்); பேழை - ஒருவகைப் பெட்டி.

307. அம்புலி ஆரம் - சந்திரனும் முத்து மாலையும். ஒலி - கடலொலி. கும்பமுனி - அகத்தியமுனிவர். 308. அருந்து படி - உண்டபடியே.

307 - 8. முந்நீரோடு அம்புலியையும் ஆரத்தையும் அருந்தென்று கும்பமுனிக்குக் கூறல் உமக்கு இசையாதோ. கடலினையுண்டால் அம்புலியும் முத்தும் அதனொலியும் இராவென்றபடி. கடலிற்றேன்றுதலால் அம்புலியையும் உடன் கூறினர்.

309. விற்கரும்பைக் கல்லானைக்கு அன்றுபோல் நீர் அளித்தால் ஆகாதோ.

310. சின்னம் - சிவசின்னம், காளம் (குயில்.)

312. ஒண்ணுதல் - உமாதேவியார்.

# சங்கரநயினார் கோயில் சம்பந்தமான செய்திகள் உள்ள நூற்பகுதிகளும் தனிப் பாடல்களும்

பின்னே காட்டப்பெற்றுள்ள சில நூற்பகுதிகளும் தனிப் பாடல்களும், இத் தலத்திற் செய்யப்பெற்றுள்ள சில திருப்பணி வரலாற்றையும் வேறு சில வரலாற்றையும் தெரிவிக்கின்றன.

## திருவருட்பாமாலைப் பகுதி

[இந்நூல் முன்பு ஊற்றுமலை ஸமஸ்தானத் தலைவராக இருந்த மருதப்பத் தேவர்மேல் கன்றுப்பூர்க் கவிராயர் இயற்றியது.]

### கலிவெண்பா

1. மணிகொண்ட பொன்மதிலு மாளிகையுஞ் சூழக்
கணிகொண்ட ராசைக் கனியே—பணிகொண்ட
2 புற்றிடமும் வெள்ளிப் பொருப்பிடமும் பொய்தீர்ந்த
மற்றிடமும் வாழு மறைமுதலே—சொற்றெரிந்த
3. பாவுடையா னேவும் பழம்பொருளே பைங்கிளிநேர்
ஆவுடையா ளைப்புணரு மாதியே—காவிடங்கொள்
4. பொன்னு கமுநெடிய புன்னு கமுமிரண்டு
பன்னு கமும்படைத்த பானுவே—எந்நாளும்
5. நாக சுனையி னனைவார் வினையகற்றி
மாகமுற வைக்கு மகேசனே—சாகரத்தின்
6. உண்மருந்து கொண்மினென வும்பருக்கு மிம்பருக்கும்
மண்மருந்து நல்கும் வயித்தியனே—தண்மலிந்த
7. பாதி மதிச்சடையும் பைம்பொற் கிரீடமும்பொற்
றுதவிழ்ந்த கொன்றையும்பூந் தண்டுளவும்—சோதிதரும்
8. சங்கக் குழையுந் தனிமகர குண்டலமும்
செங்கைப் பணிலமொடு தீமழுவும்—தங்குமணிக்
9. கண்டிகையும் பாம்புங் கவுத்துவமும் பொன்னணியும்
புண்டரிக வீருரியும் பொற்றுகிலும்—கண்டுகண்டு
10. காரேறு வானிற் கவினிந் திரசாபம்
நேரே நிமிர்ந்தெழுந்து நின்றதென்ன—வாராத

11. விச்சை தரும்பவள மென்மலையும் பொன்மலையும்
பச்சை மலையுமொருப் பட்டதென்ன—அச்சுதனோர்
12. பாக முறலாற் பசுமையொடு செம்மையிரண்
டாகமுறுஞ் **சங்கரநா ராயணனே**—யோகமுறும்
13. பொங்கரவஞ் சூழ்ந்திறைஞ்சப் புற்றினிடத் தேயெழுந்த
**சங்கரநா ராயணனே** சம்புவே—எங்கள்குல
14. தெய்வமே யெவ்வுயிர்க்குந் தீரா வினைதீர்க்கும்
சைவமே **சீராளச் சங்கரனே**—பொய்வினையேன்
15. ஆறு விடருற் றழைத்தாற் றிருச்செவிக்கங்
கேறுதோ வென்றெதிர்நின் றேத்தினேன்—ஆறுரும்
16. கற்றைச் சடையான் கணநா தரிலொருவன்
மற்றைச் சிவன்போல் வடிவாகிப்—பொற்றொடையார்
17. செக்கர்ச் சடையுந் திருநீறுங் கண்டிகையும்
தொக்க புயநான்காய்த் தோன்றியே—மிக்க
18. முறையிட் டவனுரென் முன்னுரையா யென்ன
இறையிட்ட மாய்நின் றிசைத்தான்—திறையிட்டுப்
19. பூவேந்தர் போற்றும் புலமைக் கரசான
பாவேந்தர் போற்றும் பலகலையும்—நாவேந்து
20. குன்றுப் புகழான் குவலயமெ லாமகிழும்
கன்றுப்பூர் வாழுங் கவிராசன்—என்றுதிரு
21. நாமம் படைத்துடையோ னுனென்றே னத்தனையும்
தாமம் படைத்தவர்முன் சாற்றவே—காமனுடல்
22. தியழலாச் செற்றோன் றிருச்செவிகேட் டுக்குழைந்து
கூயவனை யிங்கே கொணர்தியெனத்—தாயனையான்
23. ஏவா முனம்வந் தெனைவா வெனவழைத்துத்
தேவாதி தேவன் றிருக்கொலுவில்—மேவும்
24. அயனெடுமா லிந்திரனு மண்டர்முனி வோரும்
சயசயவென் றேத்துஞ் சபையில்—முயலும்
25. நெருக்கொதுக்கிச் சன்னிதியி னேரே நிறுத்த
உருக்கியருட் பாடல்செய லுற்றேன்—பெருக்கெனவே
26. வீழ்ந்தே னெழுந்தேன் விழிநீர் பொழியவடி
தாழ்ந்தே னருளிற் றடைப்பட்டேன்—ஆழ்ந்தபணி
27. பூண்டவனே போற்றிமண்ணிற் புண்ணியனே போற்றியென்னை
ஆண்டவனே போற்றியென வாலித்தேன்—நீண்டசடை
28 **ஆவுடையாள்** பங்கா வருட்பார்வை காட்டியெனைக்
காவுடையா யென்றுகண்ணீர் காட்டினேன்—தேவர்க்

29. கொருவா னவனிரங்கி யுன்வரவே தென்று
திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்—
* * * *

30. மற்றிடமுமின்றி மனையுங் கிடையாமற்
புற்றிடத்திற் போந்துகுடி புக்கிருந்தோம்
* * * *

31. ஏவுடையா ரிட்ட விருநாழி நெல்லையுநம்
ஆவுடையா ளுக்கென் றளந்துவிட்டோம்
* * * *

32. கண்டிதமாய்ச் செய்யுங் கவியறியோம் புற்றுமண்ணென்
றுண்டதனை யாங்கே யுவந்தெடுத்தே—உண்டை
33. அரைத்தரைத்துக் கைசலிப்ப நாவுடைக்கு வேலை
உரைத்தொழுக்க வேலைநமக் குண்டே—உரைத்துணநாம்
34. மண்ணைக் கொடுக்கினுங்கை வாசியுண்டென் பாரதனுற்
புண்ணைப் புரைகளைப் போக்குவிப்போம்—உண்ணவும்வே
35. றாதியமில் லாதா வுடையாளு நாமுமறப்
பாதியுடம் பானேம் பசுமைகாண்
* * * *

36. பண்டிதனு மென்றீர் பசிப்பிணிக்கு நீரெனக்கோர்
உண்டைமருந் தேனு முதவிடீர்
* * * *

37. ஏந்து சடையானை யெம்பெருமா னைச்சிவனைச்
சாந்தமதி கங்கை தரித்தானை—ஆய்ந்தசிவ
38. சங்கரனை ராசைத் தனிப்பொருளை யாவுடையாள்
பங்கரனைத் தெண்டனிட்டன் பாகவே—அங்கருளிச்
39. செய்த படிக்குன் றிருக்கொலுவின் முன்வந்தேன்
வெய்ய கலியிருள்போய் விட்டதே.

---

## வனச விடுதூது

[இந் நூல் ஊற்றுமலை ஸமஸ்தானத் தலைவராக இருந்த நவநீத கிருஷ்ணதேவர்மேல் கன்றுப்பூர்க் கவிராயர் இயற்றிய பிரபந்தம்.]

1. சீராசை யாவுடைய தேவிபுணர் புன்னைவனத்
தாரார் சடைப்பரனுக் கன்புமிகப்—பேராது
2. மிக்கான பூசனைநை வேத்யமறைக் கட்டளையும்
எக்கால முந்தவறு தேநடத்தி.

### சவ்வாது விடுதூது

[இந்நூல் வடகரை ஜமீன்தாராக இருந்த திரிகூட ராஜ கோபால துரையின்மீது பாடப் பெற்றது.]

—தையலொரு
பாகன் சிவாயப் பரனுக்குந் தென்கூறை
நாகசுனை யாவுடையா னுயகற்கும்.........
......... ......... ......... .........
நடத்துமறைக் கட்டளைக்கோ.

### சந்திரகலாமஞ்சரி

[இந்நூல் வடகரை ஜமீன்தாராக இருந்த பெரியசாமி செம்புலிச் சின்னணைஞ்சாத்துரையின் மாப்பிள்ளையாகிய பெரியசாமித் தேவர் மேல் கடிகைமுத்துப்புலவர் பாடியது.]

நறைக்கட் டளைக்குமலர் நாகவனந் தாற்கும்
அறைக்கட் டளைப்படியுண் டாக்கிச்—சிறக்கவே
ஆலயமு மண்டபமு மன்னசத்ர சாலையும்பூஞ்
சோலையுஞ் செய்த சுகிர்தவான்.

### வடகரைச் சின்னணைஞ்சாத்துரை

பள்ளுப்பிரபந்தம்

[இதனை இயற்றியவர் கடிகைமுத்துப் புலவர்.]

திருமலையாண் டவர்தமக்குத் தினபூசை யொடுதேரும்
திருநாளு நடக்கவே கூவாய் குயிலே.
கருதுசொக்கர் சங்கரர் நெல்லையப்ப ருக்குமறைக்
கட்டளைகள் தழைக்கவே கூவாய் குயிலே.

### பெரியசாமிச் சின்னணைஞ்சாத்துரை

விறலி விடுதூது

1. அன்ன ளறம்வளர்த்தா ளாதலினு லாவுடைத்தாய்
தன்னு யகனுமவ டானுமே—இந்நாளில்
2. இந்தத் தருமம்வளர்ந் தேற வெழுந்தருளி
வந்திருக்கு மம்பொன்மலை மாதினுக்கும்—இந்தணியும்
3. சங்கரலிங் கர்க்குந் தக்கும்பூ சனைநடத்திப்
பங்கயமு நீலோற் பலமலரும்—மங்காத்
4. தடங்களுஞ்செய் வித்தே தங்குதற்கங் கங்கே
இடங்கள் வெகுவசதி யென்ன—மடங்கள்பல
5. கட்டித் திருப்பணிகள் கட்டளைக ளர்ச்சனைகள்

மட்டற்ற பொற்பணிகள் வாகனங்கள்—கட்டுபரி
6. வட்ட முதலமைத்து வாய்த்தசிறு காலசந்திக்
கட்டளையே கோலா கலஞ்சிறந்த—குட்டமென
7. ஆவலுடன் செய்யுமன தன்பினு லாதிவிண்டு
தேவனிவ னன்றிநர சென்மமோ—பூவுலகில்
8. என்னப் பெரியோ ரெடுத்தியம்பும் பாக்கியவிற்
பன்னப் பிரபலஞ்சேர் பத்திமான்.

## தனிப்பாடல்கள்

[பின்னுள்ளவை வடகரை ஸ்தாணுபதியாக இருந்த பொன்னம்பலம் பிள்ளை இயற்றியவை.]

### வெண்பா

1. புற்றெங்கே **புன்னை** வனமெங்கே பொற்கோயிற்
சுற்றெங்கே நாக சுனையெங்கே—இத்தனையும்
சேரத்தா னங்கிருக்கத் தேவநீ தான்றனித்தித்
தூரத்தே வந்ததென்ன சொல்.
2. விள்ளுவமோ **சீராசை** வீடுவிட்டுக் காடுதனில்
நள்ளிருளிற் செண்பகக்கண் ணம்பியான்—மெள்ளவே
ஆடெடுக்குங் கள்ளரைப்போ லஞ்சா தெமைக்கரிசற்
காடுதொறு மேயிழுத்தக் கால்.

### கட்டளைக் கலித்துறை

3. காவிக் கலையிலை யோகப்ப லேறக் கடலிலையோ
ஆவிக்கு மீளப் பிறப்பிலை யோகல்லி லம்புதனை
ஏவிப் பிளப்பது போலே யிதமறி யாதவரைச்
சேவிப்ப ரோசிவ **சங்கர ராசைச் சிவக்கொழுந்தே.**

---

**இந்நூல் எழுதப்பெற்றிருந்த ஏட்டுப் பிரதிகள் இரண்டனுள் ஒன்றன் முதலில் பின்னுள்ளவை வரையப் பெற்றிருந்தன:**

### கட்டளைக்கலித்துறை

பேதை தனக்குப் பிராயமு மேழு பெதும்பைக்கொன்ப
தோதிய மங்கைக்குப் பன்னிரண் டாகு மொளிர்மடந்தை
மாதருக் கீரே ழரிவை பதினெண் மகிழ்தெரிவைச்
சாதிமூ வேழெனும் பேரிள நாலெட்டுத் தையலர்க்கே.

போரணியும் வைவேற் புரவலரும் வாழிமிகு
சீரணியு **மாவுடைய தேன்**வாழி............
............**சங்க ரேசருலா** வாழி..................

வரராசை சுவாமி சங்கரலிங்கம்பேரில் உலா **செங்கோட்டைத் தோப்பையா கவிராசரது.** எடுத்தபேர் படிச்சுக் கொண்டு திரும்பக் கொடுத்துவிடவும். ஆவுடையம்மன் துணை.

---

# அரும்பத முதலியவற்றின்

# அகராதி

[ எண் - கண்ணியின் எண் ]

இந்நூலில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின்

# முதற்குறிப்பகராதி